ஓம் பரப்பிரம்மணே நம:

64-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆனந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ்.ஜி. இராமாநுஜலுநாயுடு

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) [REGISTERED.

| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸவூ தைமீ 1உ | இதழ்-32. |
|---|---|---|
| Vol. 7. | 1933-ம்வூ ஜனவரிமீ 13உ | No 32. |




"இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்" என்று இறைவனை நோக்கிப் பெரியோர் பாடியுள்ளார். இன்பம் நிறைந்தது இவ்வுலகு. இன்பம் அனுபவிக்கவே நாம் பிறந்தோம். காணுவன யாவற்றையும் இன்பமாக்கிக்கொள்ளும் பக்குவம் நம் உள்ளத்தே தோன்றவேண்டும். துன்பத்திற்கும் ஒரு புன்னகை, இன்பத்திற்கும் ஒரு புன்னகையாக நின்று, அனைத்தும் பகவத் ஸங்கல்பமென்று கொண்டு சித்தத்தை இறைவனிடத்திற் செலுத்தக்கடவோம். எவ்வித சோதனையிலும் ஒருவித மனோ சாந்தமும் சமாதானமும் பெற்றுக்கொள்ள எந்த சந்திலேனும் இடங்கண்டு தேடித் தணித்துக்கொள்ளவேண்டும். ஸகல ஸாம்ராஜ்யங்களையும் பக்தர்களுக்கு அளிக்கத் தயாராயிருக்கும் பகவானை அன்போடும் பக்தி செய்வோம். ஈசனை சரணமடைந்தவர்களுக்குத் துக்கமேது? வியஸனம் எங்கிருந்துண்டாகும்? புத்தியுள்ள மனிதனுக்கு ஞானவிருத்தி ஸஹஜ குணமாயமைந்துள்ளது. ஞானத்தை விருத்தி செய்ய ஞானப் பிரதாயினியான ஜெகன்மாதாவைத் துதித்து அந்த அன்னையின் அருளைப் பெறுவோமாக.

ஃ

"மற்றோர் தெய்வம் எண்ணேன், உன்னை என் மனத்து வைத்துப் பெற்றேன்" என்றவாறு தன் குல தெய்வத்தையே ஸதா சிந்தித்துப் பூஜித்துப் பக்தி செய்வோருக்கு மற்றோர் தெய்வம் எண்ணப் பொழுதேது? தனது பர்த்தாவின் திவ்ய ரூபத்தையே தனது ஹிருதய கமலத்திற் குடியேற்றிக் கொண்டுள்ள பதிவிரதா ரமணிகளுக்கு மற்றொரு ரூபத்தை நினைக்க நேரம்

எங்கிருந்து வரும் ? ஒன்றில் மனது ஸ்திரமாய்ப் பதிந்துவிடும்போது மற்றொருவர் நம்மருகே யிருந்து சொல்லும் வார்த்தைகளும் நமது செவியிற் படுவதில்லை. மனதை ஒன்றிலேயே செலுத்திப் பூஜித்தால்தான் அது நிலையாய் ஊன்றிப் பலப்படும். ஒரு நதியைப் பல கால்வாய்களாகப் பிரித்தால் அதன் தீவிர வேகம் குன்றிவிடுவதுபோல், நமது சித்தமும் பல இடங்களில் அலைந்துகொண்டிருப்பின் பயனைக் காண இயலாது. ஆதலின், பகவானை நமது மனது வசீகரமாகிச் சம்மதித்த எந்த ஒரு ரூபத்திலேனும் கொண்டு, அந்த ரூபத்தை உள்ளத்திலும் கண்டு இன்புற்று, அந்த ஒரு வழியிலேயே உறுதிபற்றி நின்று உய்யக்கடவோம்.

ஃ

"வைத்தியனுக்கும் வியாதியுண்டு" அவனும் அதைப் போக்கிக்கொள்ள வேண்டும். அவ்விதமே பக்தர்களா யிருப்போரிடத்தும் பல குறைகளுண்டு. அவற்றை அவர்கள் நிவர்த்தி செய்துகொண்டு முன்னிலும் அதிகமாக பக்குவம் பெறவேண்டும். ஒரு நிமிஷ காலத்தில் பல வருட காலத்தின் நற்செயல்களும் நாசமாகிவிடும். துவேஷ புத்தி என்றும் கூடாது. பிறனைத் துன்புறுத்துதல் தகாதென்பது உண்மையான மதத்தின் முடிவு. மதங்கள் யாவும் அன்பின் உருவங்கள். மதப்பற்றுள்ளவனின் உள்ளம் அபரிமிதமான அன்புடனும் ததும்பும். நோயாளிதான் கோபிப்பான். கையில் காசு இல்லாதவன்தான் பொறாமைகொள்வான். கடவுளை நம்பாதவனையே சந்தேகப்பேய் பிடித்தாட்டும். தன் சுகத்துக்காகத்தான் பிற மனிதன் பிறந்திருக்கிறான் என்பது அரக்கன் மதம். தன்னுடைய நலத்தை வெறுத்து, ஆத்மத் தியாகத்தைத் தன் கடமையெனக் கொள்ளுதலே உண்மையான மதமாகும். இயேசுநாதர் இதையே உபதேசித்தருளினர். புத்தர் இந்த உண்மையை அநுபவத்தில் காட்டினர். மகம்மது நபிகளும் அப்படியே. வைஷ்ணவ சமயாசாரியரான ஸ்ரீ இராமாநுஜர் பிறந்ததும் உழைத்ததும் இதற்காகவே.

ஃ

"ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி" என்றபடி அல்ப ஆசைகளிலே கிடந்து மயங்கி உழலும் இவ்வுலகினில், அந்த ஆசையை நாம் இழிந்தவற்றுள் கொள்ளாமல், மேன்மையான லக்ஷ்யங்களை நிறைவேற்றுவதில் கொண்டு, நம்மையும் உயர்ந்த நிலைக்கு உயர்த்திக்கொள்ளவேண்டும். தன் வாக்கையும், சத்தியத்தையும், தன் மனோவுறுதியையும், காக்கவேண்டுமென்பதில் ஆசையை வளர்க்கவேண்டும். பின்வருமாறு சபதங்கள் செய்துகொள்ளவேண்டும் :—

"நான் இந்த பூமியின் ஸமஸ்த இடங்களிலுமுள்ள ஸமஸ்த ஜாதி, ஸகல மதங்களின் ஜனங்களையும் என்னுடைய ஸகோதரர்களாய் நினைத்து நடந்துகொள்வேன் ;

"ஸேவை செய்வதே என்னுடைய முக்கிய ஜீவனமாய் வைத்துக்கொள்வேனென்று ஒப்புக்கொள்ளுகிறேன் ;

---

நமது கிராமங்களில் ஆஹாரம், ஆரோக்கியம், கல்வி, உயரின்பம், யாவும் வற்றிப்போய்விட்டன. கிராமத்தார் தம்முடைய சக்திகளைத் தாம் அறியும்படி செய்தாலொழிய அவர்களைக் காப்பாற்ற வேறு வழியில்லை.

"இந்த என்னுடைய உத்தேசம் நிறைவேறுவதற்காக ;

"நான் ஸ்வய நலத்தைக் கோராமல் பரஹிதத்தைத் தேடி முடிக்கி றேன் ;

"ஆதரவற்றவர்களை ஸம்ரக்ஷிக்கவும், கஷ்ட நஷ்டங்களில் சிக்குண்ட வர்களை முன் நின்று காப்பாற்றவும், மூடர்களுக்கு வித்யா புத்தி விவேகங் களைக் கற்பிக்கவும், ஹீனர்களென்று தள்ளிவிட்டவர்களைக் கைதூக்கிவிடவும் முயல்வேனாக ;

"அநேகருக்கு உபயோகமான மார்க்கங்களைத் தேடி அவைகளை நிறை வேற்றப் பிரயாஸைப்படுவேனாக ;

"ஒவ்வொருநாளும் குறைந்தபக்ஷம் ஒரு பரோபகாரமான காரியத் தைச் செய்வேனாக ;

"என் உத்தேசம் நிறைவேறவேண்டி நான் தர்ம நியாய மார்க்கங்களைப் பின்பற்றிக் காரியம் நடத்துவேனாக ;

"நான் வாசஞ்செய்யும் இடத்திலும், ஜில்லாவிலும் ஸமஸ்தானத்திலும், ஜென்ம பூமியிலும், சக்ராதிபத்தியத்திலும் ஸத்பிரஜையாய் வாழக்கடவே னாக ;

"நான் பாரதபூமியின் ஸுபுத்திரனும், பாகவதோத்தமனும், பரநாரீ சகோதரனும் இருப்பேனென்று ஸர்வ சைதன்ய ஸ்வரூபனான பகவானின் ஸந்நிதானத்தில் என்னுடைய வேந்தனுக்கும், அதிதிக்கும், ஸகோதரர்களுக் கும், தேசத்துக்கும் வாக்தானம் செய்திருக்கிறேன்."

இவ்விதமான சபதங்கள் செய்துகொண்டு அவற்றை நிறைவேற்றுவதில் ஆசையைப் பெருக்கி 'ஆசை' என்ற பதத்திற்கே ஒரு புது கௌரவமும், புது சக்தியும், உன்னதமும் உண்டாக்கவேண்டும்.

ஃ

"ஆசைப்பட்ட பண்டம் அழுகிப்போயிற்று" என்பர். இரவு பகல் என்ற எலிகள் மெதுவாக ஓசையின்றி ஆயுளைக் கடித்தெறிகின்றன. முடி வில் தேகம் திடீரென்று விழுந்து மறைகிறது. நாம் எதனிடத்தில் பிரியம் வைக்கிறோமோ அது நம்மிடத்திலிருந்து விலக்கப்படுகிறது. நாம் அதிக ஆசையுடன் வேண்டுவதே நமக்கு விரோதமாக முடிகிறது. நமது வெறுப் பிற்குப் பாத்திரமானதே அடிக்கடி நமக்கு நேருகிறது. நாம் கோரும் மாறு தல்கள் நடப்பதில்லை. நமக்கு ஸுகம் எவ்வளவு கிடைத்து அனுபவித்தாலும் சற்றும் திருப்தியில்லை. அளவுக்கு மிஞ்சின ஸுகமும் துக்கத்தைக் கொடுக்கிறது. நமக்கு வேண்டுவது நமக்கு எட்டாமல் தூரத்தில் ஓடிக் கொண்டேயிருக்கிறது. நமதென்று சொல்லும் தேகங்களும், அவைகளை உபயோகிக்கும் இந்திரியங்களும், மனதும் புத்தியும் ப்ரக்ஞையும் நமதுவசத்தி வில்லை. ஒவ்வொரு ஜன்மத்திலும் நடக்கும் ஸம்பவங்கள் அந்த ஜன்மத்து

---

வானத்தில் இடம் உனக்கா, எனக்கா என்று நீதி ஸ்தலத்திற்கு வியாஜ் யங்கள் விரைவாக வரக்கூடிய காலத்தை வக்கீல்கள் எதிர்பார்க்கிறார்கள்

டன் மறந்துபோவது நமது க்ஷேமத்திற்காகவேதான். அவ்விதமின்றி முந்தின ஜென்ம ஞாபகமிருப்பின் அந்தந்த ஜன்மங்களும் துக்க ஸமுத்திரமாகவே தோன்றும். அதனால் இந்த ஜன்மத்திலுள்ள ஸ்வல்ப உத்ஸாகமும் மனோதிடமுங்கூட அழிந்துபோகும். மனத்தளர்ச்சியும், விசாரமும், கவலையும், அவநம்பிக்கையுமே மனிதனுக்குப் பெரிய சத்துருக்களாகும். இவ்வாறுள்ள உலகநிலையில் பகவத் பக்தியொன்றே சாந்தி தரும் பொக்கிஷமாகும்.

ஃ

"முன்னேற்றமென்னும் துறைமுகத்தை நாடி" சத்தியம் என்னும் தோணியேறி, நம்பிக்கையென்னும் மாலுமிபற்றி, ஒழுக்கமென்னும் சரக்கையேற்றி, விடாமுயற்சியென்னும் துடுப்புகளினால் தற்கால வாழ்க்கை என்னும் கடலைப் பகவத் பக்தியுடன் தாண்ட முற்படுவோமானால், காலக்கிரமத்தில் நாம் குறைவற்ற செல்வமும், நோயற்ற வாழ்வும், முடிவில் முக்தியெனும் பரமசாம்ராஜ்யமும் கடவுளின் அருளால் அடைவோமென்பதற்கு ஐயமில்லை.

ஃ

"நம்முடைய நிஜ ஸ்திதி என்ன ?" எங்கே வந்தோம் ?—எங்கே போகிறோம் ? நமது சரீரமோ எலும்பு, நரம்பு, தசை, ரத்தம் முதலியவைகளின் தொகுதி. இதில் பிராணன், மனசு, புத்தி இவைகள் கலக்கின்றன. எவனால் இவைகள் பிரகாசம் பண்ணப்படுகின்றனவோ அவன்தான் ஆத்மா. ஒவ்வொரு ஜீவனும் அதனதன் கர்மத்திற்கேற்றவாறு நானா ரூபங்களை அடைகின்றது. இதில் வாஸனாமயமான மனஸ்ஸு ஜீவனோடு சேர்ந்து சலிக்கின்றது. நம்முடைய பூர்வ வாசனை நம்மைத் தூண்ட நாம் சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தங்களென்ற விஷய ஸுகங்களில் ஈடுபடுகிறோம். இதனால் நமக்குக் காமமும், காமத்தினால் கர்மமும், கர்மத்தினால் சரீரமும், சரீரத்தால் அபிமானமும், அபிமானத்தால் ஸம்சாரமும் வாய்க்கின்றது. இந்த ஸ்தூல சரீரத்திலிருந்து ஜீவன் வெளியேறிவிட்டால் சரீரத்தின் ஒவ்வொரு பாகமும் பஞ்சபூதங்களில் லயமாகிவிடுகிறது. திரும்பத் திரும்ப பார்த்த (ஸ்திரீ) ரூபத்தையே பார்க்கிறோம்; கேட்ட கானத்தையே கேட்கிறோம். முன்னம் ருசி பார்த்த பதார்த்தங்களையே மீண்டும் புசிக்கிறோம். ஒரு விசேஷத்தையும் காணோமே ? ஆகவே, மனதினின்று விஷய சுகத்தை விலக்கி, பகவானின் லீலைகளைக் குருமுகமாய்க் கேட்டு தியானித்துவரின், நாளடைவில் வைராக்கியமுண்டாகும் ; தேகாபிமானமும் குறையத் தலைப்படும் ; கிரமமாய் பக்தி உதயமாகும் ; ஞானமும் வந்துவிடும் ; ஞானம் தோன்றவே இந்த ஜீவனும் மோக்ஷம் (விடுதலை) அடைகிறான். ஆகையால், எப்போதும் சலிக்கும் தன்மையுள்ள மனதை, அநித்தியமானதும், ப்ரகாஸமில்லாததும், துக்க ஹேதுவானதுமான சம்சாரத்தில் உழலவிடாமல் சத்தியஞான ஸ்வரூபியான பிரம்மவஸ்துவி னிடத்தில் செலுத்தி ஆநந்தபரிதர்களாவதற்கு முயலக்கடவோம்.

---

பிணியாளி தன்னை சுகதேகியாகவோ, வலிமையற்றவன் வலிமையுள்ளதாகவோ நெடுநாள் பொய் நடிப்பு காட்ட இயலாது. நாடகத்தில் இராஜாவாக அபிநயிப்போன்—பகற்காலத்திலும் இராஜாவாகக் காட்ட முடியாது. வெறும் அபிநயம் பலஹீனத்துக்கு மூலாதாரம். அது, நம்முடைய எலும்புக் கூட்டை மற்றொருவனுடைய தோலினால் போர்த்துக்கொள்வதுபோலாம்.




# மேன்மக்கள் என்பவர் யார்?



ன்றோர் என்பதும், மேன்மக்கள் என்பதும் பழமை தொட்டு வழங்கி வரும் பெருமைப் பெயராம். மேன்மக்களென்றுசொல்லப்பட்டவர்கள்இயற்கையிலேயே உத்தமமான குணங்கள் அமையப்பெற்று உருவமமைந்த சுபாவத்தினராம். மேன்மக்கள் என்ற பெயர் எத்திறத்தோருக்கும் ஒரு உயர்ந்த பதவியாகவும், அதிகாரமாகவும் கொண்டாடப்படும். மேன்மக்கள் எப்பொழுதும் மேன்மக்களே. “சீரியர் கெட்டாலும் சீரியர் சீரியரே.” ஆபத்தும் அபாயமும் மேலிடும்பொழுதெல்லாம் தங்களின் செய்கைகளால் தங்களின் மேம்பாடான குணங்களை வெளிப்படுத்துவர். “கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே” என்பது மற்றொரு வாக்கியம். பட்டம்சூடிப் பதவி உயர்ந்துள்ளோர்களுக்குத் தலைவணங்காதோர்களும் மேன்மையான குணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களைக் கண்டவிடத்துத் தக்ஷணமே வணங்கி உட்பட்டு நடந்து கொள்வர். மேன்மக்களுக்கு மாற்று உயர்வது நாகரீகத்தினாலும் செல்வப்பெருக்காலும் விநயத்தாலுமல்ல; அவர்களின் உத்தமமான ஹிருதயங்களால்தான்; அவர்களின் மேன்மையான குணங்களால் தான். எப்பொழுதுமே நேர்மையாக நடந்து, செய்வதைத் தர்ம நியாயப்படி செய்து உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி பேசுவார்கள். தங்களின் குணத்தை மேலுக்குத் தோன்றுமளவுக்கு மாத்திரமே வைத்துக்கொள்ளாமல், தமது மனச்சாட்சிக்கு நியாயமாய் அக்குணங்கள் தங்களின் உள்ளத்திலிருந்து எழும்வாறும் செய்து கொள்வார்கள். உள்ளும், புறமும் பரிசுத்தமாயிருக்க நாடுவதிலேயே அவர்களின் கவனம் செல்லும். தமது மானத்தைத் தாம் மதிப்பது போலவே பிறரது மானத்தையும் எண்ணிக் காக்க முயலுவர். காருணியம் அவர்களின் கண்ணுக்குத் திவ்ய குணமாயிருக்கும். அக்காருணியத்தினின்றும் விநயம், பொறை, தயை, அன்பு இவைகள் தானாகவே தோன்றும். மேன்மக்களின் பிறவிக்குணமாயுள்ளது இரக்கமாகும்.

உத்தமனுயுள்ள ஒருவனுக்குப் பெருந்தன்மையுடன் நடந்து கொள்ளவேண்டு மென்பதில் இயற்கையாகவே அதிக ஆவல் உதிக்கும். சொல்லிலும் செயலிலும் அவன் கொள்ளுகிற நோக்கம் கண்ணியமாயிருக்கும். அவன் நழுவலான 'பட்டும் படாதது போன்றதான' பேச்சுகளைப் பேசான். அவன் நா புரளுகிறதில்லை; மடிப்புச் செய்கிறதில்லை ; பெருந்தன்மையும் உண்மையும் பரிசுத்தமும் நேர்மையு முள்ளவனுயிருப்பான். செய்வதை நேர்மையாகச் செய்வதே அவனுடைய கொள்கையாம். அவன் 'ஆம்'—'ஆகட்டும்' என்று சொல்லும்பொழுது அச்சொல்லே ஒரு பிரமாணம் ஆகின்றது. ஒன்றுக்கு ஒப்பிய பின்னரோ, வாக்கு தந்தபிறகோ அதனின்றும் பிசகுவதேயில்லை. தகுந்த சமயத்தில் அவன்—'அல்ல'—'முடியாது'—எனும் பராக்கிரமச் சொல்லைச் சற்றும் பின்னடையாது அச்சமற்றுச் சொல்வான். பரிதானம் வாங்க என்றும் உடன்படான். புல்லறிவுடையோரும் குணங்கெட்டவர்களும் மாத்திரமே வேண்டியவர்களுக்குத் தம்மை விற்றுப்போடுவார்கள்.

ஃ

தமது நல்லொழுக்கத்தையும் நற்குணங்களையும் கெடுத்து மயக்கவல்லதான வெகுமதிகளையும், சுயநல சிந்தையுடன் பிறர் தரும் எவ்வகைப் பொருள்களையும் மேன்மக்களானேர் ஏற்க இணங்கார். தமது செய்கடனை நெறிதவறிச் செய்யவைக்குமென்று இவை போன்ற பரிசுகளை மறுத்து விடுவர். இந்த இயற்கைச் செயலே அவர்களுக்கு மிகவும் கௌரவமாக முடியும். "என் ஒழுக்கத்தின் சுதந்திரத்தையும், என் உத்தியோக பதவிக்குரிய மேம்பாட்டையும் இந்த வெகுமதிகளின் நிமித்தமாக நான் விற்றுவிட விரும்பவில்லை" என்று கம்பீரமாகக் கூறுவர். சுயநலம் மறுத்தல் எனும் மேலான குணம் அவர்களின் சொந்த சொத்தாக இருக்கும். கழுவுவதற்கு அவர்களின் கையில் என்றைக்கும் அழுக்கு எருது.

ஃ

செல்வம், அந்தஸ்து இவைகள் மேன்மக்களுக்குரிய சகஜ குணங்களோடு தொடர்ந்து சம்பந்தப்பட்டிருக்கின்றனவென்பதில்லை. ஏழை மனிதன்கூட தன் உள்ளத்திலும், அன்றன்று ஒழுகும் ஒழுக்கத்திலும் உத்தமகுணம் உள்ளவனுயிருப்பினும் இருப்பான். சிறந்த மேன்மையாளர்க்குரிய லக்ஷணங்களாகிய நேர்மை, உண்மை, நிதானம், விநயம், பொறுமை, தீரம், தன்மானம், தற்சகாயம் இவை

மனுஷ்ய ஸ்வபாவத்திலே தீமைகள் இருப்பது மெய்தான். தீமையை வெல்லுதல் எக்காலத்திலும் பரிபூர்ணமாக நிறைவேருது. தீ எரிவதுபோல் நமது நாகரீகத்தில் அது தொடர்ச்சியாக நடக்கும் செய்கையாம். தீய தானமமின்றி உயரிய காதலில்லையன்றே ?

அனைத்தும் அந்த ஏழையினிடத்தில் ஒன்றுசேர அமையினும் அமையும். மனச்செல்வ மிகுந்துள்ள வறிஞன், மனத்தின்கண் வறிஞன செல்வனைக்காட்டிலும் எவ்விதத்திலும் மேலானவனேயாம். உண்மையாக வறிஞனுயுள்ளவனுக்கு இவ்வுலக செல்வம் எதுமில்லாதிருந்தும், உள்ளத்தில் திருப்தி கொள்ளும் தன்மையிற் சிறந்தோனுதலின், அவன் அனைத்தையும் பெற்றிருப்பவனுகவே கருதப்படுவான். சாழ்ந்த புத்தி யுடையோரே வறிஞரெனப்படுவோர். கால வசத்தால் உள்ளதெல்லாம் இழப்பினுங்கூட, தீரமும் மனமகிழ்ச்சியும் ஊக்கமும் தருமமும் தன்மானமும் கைவிடா திருப்பவன் எப்போதும் செல்வனே. அவன் எப்படிப்பட்ட சங்கடங்கள் நேர்ந்த காலத்தும் கவலைகொண்டு மனஞ்சோராதவனுகி, மேன்மக்கள் போலவே கம்பீரமாக நடந்து வருவான்.

ஃ

தீரமும் சாத்வீகமு முள்ளவனை இழிவிற்கிழிவான ஆடைவுடுத்தி யிருக்கவும் ஒவ்வோர் சமயத்தில் காண்போம். நம்மை வாவென்று உபசரிக்கக்கூட அவனிடம் அந்த சமயம் ஒரு காசும் இல்லாதிருக்கலாம். ஓரிடத்தில் பெரும் வெள்ள மத்தியிலே முழுகிப்போக இருந்த ஒரு குடும்பத்தினரைத் துணிகரத்துடன் சிற்றோடம் ஒன்றுடன் சென்று பிராணகண்டம் நெருங்கிய அந்த நிமிஷத்தில் ஏற்றி வந்து காப்பாற்றிவிட்ட ஒரு வாலிபனுக்கு ஒரு தனவான் வெகுமதி தரவந்தபோது, அந்தத் தீரமுள்ள இளஞ்சிங்கம் அதை மறுத்துவிட்டு, "எனக்கு வேண்டாம்; நான் என் பிராணனை விக்கிரயம் செய்வதில்லை; அந்தப் பணத்தை நான் தப்பித்துக் கொண்டு வந்த இவ்வேழைக் குடும்பத்தாருக்குக் கொடுங்கள்; அது இவர்களுக்கு மிகவும் உதவியாகும்" என்று மறுமொழி பகர்ந்தான். அவன் மிகச் சாமான்யமாய்ப் பயிர்க்குடியின் ஆடையே உடுத்தியிருந்தும், மேன்மக்கட்குரிய மெய்யான குணம் அவனிடத்தில் குடிகொண்டு மேற்சொல்லிய தீரவார்த்தைகளைப் பேசச் செய்தது. இவ்விதமே, அலையதிர்கடலில் தம் ஓடத்துடன் பேரலையை ஊடறுத்து வேகமாய்ச் சென்று அங்கே கப்பலுடைந்து தவிப்போரைக் காப்பாற்றிய எளியோர்கள் எத்தனையோ பேர் உண்டு. அன்னோரின் சலியாத் தீரத்தையும், தம் உயிரைப் பெரிதாகக்கொள்ளாது ஆழ்கடலிற் போராடிய வீரத்தையும் எவ்வளவு போற்றினும் தகும்.

ஃ

மற்றொருவித மேன்மைக்குணத்தை இங்கே மகிழ்ச்சியுடன் குறிப்பிட விரும்புகிறோம். ஒரு யுத்த சந்தர்ப்பத்தில் அழுவார்

---

எதிலுமே—நமக்கு நாமே நாயகர்—என்ற எண்ணம் நமக்கேற்படவில்லை. இவ்விதமான உள்ளச்சிறுமையிலும் பெரிய கேடு வேறில்லை.

ஒருவருமின்றிக் கிடந்த அநாதைப்பிரேதமொன்றை ஒரு வண்டியில் வைத்து இழுத்துப் போகப்பட்ட காட்சியை அவ்வழியே வந்த அரசர் கண்டு மனம் உருகி, "ஏழையாயினும் நமது பிரஜைகளில் எவனும் தகுந்த மரியாதையோடல்லாமல் மயானத்திற்குச் செல்வது தகுதியன்று" என மொழிந்து, வெகு தொலையிலுள்ள மசானத்திற்குத் தாம் பிரேதத்தின் பின்னே மரியாதைக்காகப்போய் நடக்கவேண்டிய கருமங்கள் அனைத்தையும் தாமே வணக்கமாகச் செய்வித்தார். மேன்மக்களுடைய லக்ஷணங்களை விளக்குவதற்கு இத்திருஷ்டாந்தம் மிகச் சிறந்தது.

ஃ

மேன்மக்களாவோர் எல்லாவற்றினுள்ளும் முக்கியமாக சத்தியவந்தர்களா யிருப்பார்கள். சத்தியமானது உயிர் வாழ்க்கைக்கு முக்கியமானதென்றும், மனிதரது வியாபாரங்களில் நேர்மைக்கு சத்தியமானது உயர்நிலையென்றும் அவர்கள் உணர்ந்துள்ளார்கள். மேன்மக்களுக்குச் சத்திய மொன்றாலேயே காரியசித்தியும் புகழும் உலக மதிப்பும் உண்டாகின்றது. முக்கியமாய் முதலில் பாராட்டவேண்டியது தைரியம்; இரண்டாவது சத்தியமாகும். உண்மையான தைரியமும் சாத்வீகமும் ஒன்றுக்கொன்று இணையாகத்தொடர்ந்து செல்லும். தீரனான உத்தமன் உதாரமும் பொறையுமுள்ளவனாவான். பிறரது பிழைகளைப் பொறுப்பதே அவனது வேலையாக இருக்கும். அவன் அபாயத்திற்கஞ்சி ஒருபொழுதும் புறங்காட்டியோடாமல் சத்துருக்களை எதிர்ப்பவனாயினும், உள்ளுக்கோ அவனது நெஞ்சு மிகவும் உருக்கமுள்ளதாகவே இருக்கும். ஒரு கொசுகையானாலும் அது இறந்து படும்படி துடைத்து விலக்க அவன் மனம் பொறாதவனாகவே யிருப்பான். பிரசித்தரான நெப்போலியன் காலத்தில் நடந்த ஒரு ஸம்பவத்தை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். 'நே' என்னும் பிரான்சிய சேனாதிபதி சார்லஸ் நேப்பியர் என்ற ஆங்கிலேயரைச் சிறை செய்தார். அவர் இறந்ததும் இருப்பதும் தெரியாததால் அதை அறியவிரும்பி இங்கிலாந்திலிருந்தும் ஒரு தூதன் வந்தான். அப்போது 'நே' என்ற சேனாதிபதி, தூதனோடு வந்தவர்களை, "கைதியானவன் சிறைச்சாலையில் இருந்து கண்டு தன்க்ஷேமத்தையும், தனக்கு நடந்துவரும் உபசாரத்தையும் அவர்களுக்குச் சொல்லட்டும்" என்று ஆக்கியாபித்தார். இதற்குத் தூதுவந்தவர்கள் தியங்கி நிற்கவே, 'நே' குறுநகையோடு "பின்னும் என்னவேண்டும்?" என்று வினவ, "சார்லஸ் நேப்பியருடைய விதவையான தாய்க்குப் பருவம் முதிர்ந்து கண்கெட்டுப் போயிற்று; தாய் தன்குமாரனைக் கண்டபின் உயிர்விடவிரும்புகிறாள்."

---

நம்மவரை நாமே இகழ்ந்து, அவர்களிடம் நன்மை பிறப்பதை நாமே தடுத்து, அவர்களை உலகம் இகழ வைத்தால், அதைவிடப் பெரிய குற்றம் வேறொன்றுமில்லை.

என்று தெரிவித்துக் கொண்டனர். அதற்கு 'நே' "அவருக்குத்தாயார் இருக்கின்றாரா? ஆனால், அவர்தாமே போய்த் தாயாரைக்கண்டு தாம் பிழைத்திருப்பதாகச் சொல்லட்டும்" என்று உத்திரவு கொடுத்தார். அக்காலத்தில் பிரான்சு—இங்கிலாந்து இவ்விரு தேசத்தாரும் பரஸ்பரம் கைதிகளைக் கொடுத்து மாற்றிக்கொள்ளக் கட்டளை இல்லை. வாலிப ராணுவ உத்தியோகஸ்தராகிய சார்லஸ்நேப்பியரைச் சிறை நீக்கியதுபற்றி நெப்போலியன் சக்ரவர்த்திக்குத் தம்மிடத்தில் வெறுப்புண்டாகுமென்று 'நே' வுக்குந் தெரியும். ஆயினும் ஈன்ற அன்னையின் ஆவலை நிறைவேற்ற வேண்டுமென்ற மேலான கருணையால் விடுவிக்கலானார். இவ்விதம் 'நே' சிந்தை கசிந்து செய்த அந்த உபகாரத்தைக்கேட்டு நெப்போலியன் அவரை மெச்சினார். மற்றோரிடத்தில் ஒரு ராணுவ உத்தியோகஸ்தர் யுத்தமத்தியில் பகைவனை வெட்டக் கையோங்கியபோது அவர் தம் மாற்றானுக்கு ஒரு கையில்லையென்று கண்டு அந்தக்ஷணமே வெட்டுவதை நிறுத்தி ஓங்கின கத்தியை இறக்கி, ராணுவமுறைப்படி பகைவனை மிக உபசரித்து அனுப்பிவிட்டார். ஹா! இது எத்தனை மேன்மையான குணம்! இது நெஞ்சகத்தில் எப்பொழுதும் நினைத்துக் கொள்ளத்தக்கதாம். மேன்மக்களின் நற்குணம் இயற்கையிலேயே அன்னோரிடம் பொருந்தி விளங்குவதாகும். இவ்வாறாகவே, சாதாரணமான சேவகரும் ஆபத்து விபத்து உண்டான சமயத்தில் தமது நற்செய்கைகளால் மேன்மக்களென ஐயந்திரிபற விளக்கியிருக்கிறார்கள். பிராணசங்கடமான வேளையிலும் மேன்மக்கள் தமது செய்கடனை முடிக்கப் பின்னடையார்.

ஃ

ஜனக்கூட்டத்தில் புகுந்து செல்லும்பொழுது ஒருவன் ஓர் இளைஞனுடைய பாதத்தைத் தற்செயலாய் மிதிக்க, அவ்விளைஞன் அந்தக்ஷணமே அவன்முகத்தில் அறைந்தான். அறையுண்டவனோ, "ஐயோ! அப்பா, நான் கண்ணில்லாத அந்தகனென்று உனக்குத் தெரிந்தால், அப்பொழுது இவ்விதம் அடித்ததற்காக நீ தவறாமல் துக்கிப்பாய்" என்றான். எதிர்க்கவல்லமை இல்லாதவர்களை வாயடித்து அதட்டுகிறவன் மேன்மையாளனைப் போல் நடிப்பவனாயிருந்தாலும் இருக்கலாம். ஆயினும், அவன் மேன்மையாளனாகான். மெலியார் மீதும், அகதிகள் மீதும் தன் கைப்பலத்தைக் காட்டுவோன் பயங்காளியானால் ஆவானேதவிர, ஆண்மையுள்ளவன் ஆகமாட்டான். மனநேர்மையுள்ளவனுக்குப் பலமும், தான் பலசாலியென்ற துணிவும் இருக்குமாயின், அது அவனுடைய குணங்களுக்கு ஒரு மேன்மையை உண்டாக்கும். ஏனெனில், அவன் அதை வகை அறிந்து

---

ஜனஸமூஹத்தின் உயிருக்கு நல்வழி காட்டும் சக்தி யாதெனில், ஆத்மத்யாகமும், அனுதாபத்துக்கும் கூட்டுத்தொழிலுக்கும் இடமாகிய தர்மசிந்தையுமே யென்க.

மிக்க சாவதானத்தோடு பிரயோகிப்பான். "இராட்சதனுடொத்த வலிமை இருப்பது மேன்மைதான்; ஆயினும், அந்த வலிமையை இராட்சதனைப் போலப் பிரயோகிப்பது கொடுமையாம்" என் முன்னோர்களும் மொழிந்திருக்கின்றனர்.

ஃ

சாந்தகுணம் மேன்மக்களுடைய யோக்கியதைக்கு உத்தம பிரமாணம் ஆகும். தன்னிலும் இழிந்தோர், தன்னைச் சார்ந்தோர், தனக்கு ஒப்பாவோர் ஆகிய பிறருடைய மனத்தை வருத்தலாகாதென்று நினைவில் இருத்திக்கொள்ளும் இயற்கையும், அவர்களின் மானத்தை அபிமானித்துக் காக்கும் இயற்கையும், சிறந்த மேன்மையாளனின் ஒழுக்கம் அனைத்திலும் வியாபித்திருக்கும். அவன் பிறரது சொல்லுக்கும் செயலுக்கும் அநீதியான அர்த்தம் செய்து கொண்டு எவரையும் வருத்தமாட்டான். அதற்குப் பதிலாக, பிறரால் தனக்கு உண்டாகும் துன்பங்களைக் கூடிய மட்டிலும் சகித்துக் கொள்வான். அவன் தன்னைப் போல் அத்தனை பேறு பெறாதவர்களுடைய அசக்தியையும், குறை குற்றங்களையும் பிழைகளையும் தயவாய்ப் பொறுத்துக் கொள்வான். தனக்கு உதவும் விலங்கு ஜாதிக்கும் அவன் மனதிரங்குவான். அவன் தன் பாக்கியத்தையும் பலத்தையும் யோக்கியதையையும் குறித்து விம்பு பாராட்டமாட்டான். தான் கோரிய காரியம் சித்தித்ததென்று அவன் மனம் பூரிப்பதுமில்லை; அந்தக் காரியம் சிதறி விட்டதேயென்று மெத்தவும் குன்றிப்போவதுமில்லை. அவன் தனது அபிப்பிராயங்களைப் பிறருக்கு வலியப்போய்ச் சொல்லான்; ஆனால், சமயத்தில் தன் மனக்கருத்தைப் பிறரது நன்மைக்காக வென்று தாராளமாய் ஒளிக்காமல் எடுத்துரைப்பான். கைம்மாறு ஒன்றை எதிர்பார்த்து ஒருவர்க்கு உபகாரம் செய்யான். அன்றன்று நடந்தேறும் அற்பமான லௌகிக வியாபாரங்களில் தன்னைத் தாழ்த்தி மறுத்து, பிறரைத் தனக்கு மேலென்று நயந்து கம்பீரமாக நடந்துகொள்வதே மேன்மையாளனின் குணமாகும்.

"தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்"

என்றபடி, உதாரமதியுள்ள மேன்மையாளர்கட்கு முக்கியமாய்ப் பிறரது சுகத்தைப் போற்றும் ஆசையே அதிகமாயிருக்கும். தமக்கெனச்

---

கீழ்ப்படிதலாகிய குணமே நம்முள் வடிவெடுத்து வந்திருப்பதால் எதையும் துணிவுடன் திருத்தமுடியுமென்று நம்மால் நம்ப முடியவில்லை. எங்கே நமது தலை உடைந்துபோமோ என்கிற பயம் நம்முடைய எலும்புக்குள் ஊறிக் கிடக்கிறது. பிறனை அடிபடவிட்டு நாம் மறைந்து தப்புவிக்கவே நமது இழிந்த புத்தி நம்மைத் தூண்டுகிறது.

செலவிடுவதில் சிறிதளவேகொண்டு, பிறர்க்கெனச் செலவிடுவதில் தாராளத்தன்மையுடன் முன்னிற்பவராவார். போர்முனையில் பிராணபாயமான காயம் பட்டிருந்த ஒரு ராணுவவீரர் தமக்கு அங்கிருந்தோர் தமது தலையின்கீழ் வைத்த கம்பளி மிக்க சுகமான தலையணையாய்ச் சௌகரியமாயிருந்தது. ஆயினும், அவரது மனத்தில் ஒருசந்தேகம் தோன்றி இந்தக்கம்பளி யாருடையது என்று விசாரிக்கையில், அது ஒரு போர்ச்சேவகனின் கம்பளி என்று உத்தரம் கூறினர். அதைக்கேட்டதும் அவர் உடனே அந்தக்கம்பளியை அந்தப் போர்ச்சேவகனிடம் உடனே சேர்த்துவிடும்படிக் கட்டாயமாய்த் திட்டம் செய்தார். தாம் மரணவேதனைப்படும் சமயத்திலும் அதைச்சிறிது தணிக்கும்படி ஒருராத்திரி நேரத்துக்குக்கூட இன்னொரு இராணுவ சேவகனுடைய கம்பளியை எடுத்து உபயோகித்துக்கொள்ள அவர் மனங்கொள்ளவில்லை. தமது வாதனையைவிட, அந்தக் கம்பளியில்லாமல் அந்தப் போர்ச்சேவகன் குளிரினல் வருந்துவானேயென்ற எண்ணமே அவருக்குப் பெரிதாயிருந்து, அக்கம்பளியை உடனே அவனிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிடச் செய்தார். இதுவும் மேன்மைக் குணத்திற்கு ஒரு உதாரணமாகும்.

ஃ

முயற்சியைக் கைவிடாத மேன்மக்களின் குணங்கள் பின்வருமாறு இருக்கவேண்டும்:—அதாவது, ஒழுக்கத்தில் புனிதராகவேண்டும்; வியவகாரத்தில் நீதியுடையவராதல் வேண்டும்; சொற்றவறுதவராயும், தங்கீழ்ப்பட்டோரிடத்தில் தாட்சிணிய முடையவராயும் இருக்கவேண்டும்; விசேஷமாய், முக்கியமான காரியங்களில் பிறர் எத்தனை நம்பத்தக்கவர்களும் சமர்த்தருமாயிருப்பினும், அவர்களுடைய செயலையே ஒருபொழுதும் நம்பியிராதவராய்த் தாமும் அவர்களுடன் கலந்து, தமது கைக்குத்துணையான அளவுக்குமட்டில் அவர்களைக்கொண்டு வேலைகள் நடத்தி, அதன் முழுப்பொறுப்பையும் பிரயாசையையும் தாமேஏற்று நிற்போராகவும் இருத்தல் வேண்டும்; அபாயத்தை எப்பொழுதும் எதிர்த்து அவமதித்து, எவ்வகைக் கஷ்டத்திற்கும் பின்னிடாமல், தீரத்தோடும் சாமர்த்தியத்தோடும் முயற்சி செய்யவேண்டிய எந்தக் கருமத்திலும், துணைவர் எவராணலும் சரி, தாமும் அவர்களோடு கண்ணும் கருத்துமாய் இருப்பவராதல் வேண்டும்; கடைசியாக, இரக்கமும் கிருபையும் தர்ம சிந்தையும் மேலோங்கிப் பரிமளிப்பவரா யிருக்கவேண்டும். இப்படிப்பட்ட மேலான குணமுள்ளவர்களே மேன்மக்களாவார்கள். "நல்லார் ஒருவர் உளரேல், அவர்பொருட் டெல்லார்க்கும் பெய்யு மழை."

---

உலகத்தினிடம் தன்னையும், தன்னிடம் உலகத்தையும் காண்பவனே உண்மை காண்பான்.

# கெரோசின் எண்ணெய்.



கெரோசின் எண்ணெய்க்கு ஐம்பது வருஷங்கட்கு முன் 'கல் தைலம்' என்று தமிழில் பெயர் வழங்கியதாகத் தெரிகிறது. இந்த எண்ணெய் அகப்படும் இடங்களெல்லாம் அநேகமாய் நிலக்கரிகள் அடர்ந்த தரையும், பூர்வ காலத்துக் காடுகள் அழிந்து மக்கிய பூமிகளுமாகவே யிருக்கின்றன. கெரோசின் எண்ணெய் பூமிக்குள் இன்ன இடத்தில் இருக்கிறதென்பது அதை யடுத்த ஆகாயத்தில் வியாபித்திருக்கும் அதன் நாற்றத்தாலும், சில இடங்களில் அதை யடுத்துள்ள குளம் குட்டைகளில் எண்ணெய் படர்ந்திருப்பதனாலும் கண்டறியப்படுகிறது. யந்திரங்கள் மூலம் பூமியைத் தோண்டி 500—600 அடி ஆழத்தின் கீழ் இந்த எண்ணெயைக் கண்டெடுப்பார்கள். சில தருணங்களில் எண்ணெய் அகப்படாமற் போவதுமுண்டு. ஏதாவது ஒரு நடுக்காட்டில் எண்ணெய் அகப்படத் தொடங்கினால் அந்த நிமிஷமே அவ்விடத்தில் ஒரு புதுப்பட்டணம் உண்டாய் விடுகின்றது. ஏராளமான ஜனங்களும் தொழிலாளிகளும் கூடி விடுகின்றனர். அங்கு எண்ணெய் சுரப்பது ஓய்ந்துபோன மறு நிமிஷமே அப்பட்டணம் காலியாகி அழிந்து போகின்றது. பயிர் செய்து அன்றாடம் ஜீவனம் பண்ணவும் சக்தியில்லாத அநேகம் எளிய குடியானவர்கள், தங்கள் நிலத்தில் இந்த எண்ணெய் அகப்படக்கண்டு அதனால் திடீரென்று விசேஷ தனவான்களானதுமுண்டு. வெளியிலிருந்து புதிதாய்ப் போகிறவர்களுக்கு இந்த எண்ணெய்த்தொழில் நடக்கும் இடங்களிலிருந்து முதலில் சகிக்கூடாத ஒருவகை வெடுப்பான நாற்றம் தோன்றுமாயினும், அவ்விடம்போன சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த நாற்றமே வழக்கமாகிப் பின்பு ஒரு கெடுதியும் தோற்றுவதில்லை. அந்த வழக்கத்தினால் அநேகருக்கு மற்றக் காற்றுகளைவிடக் கெரோசின் எண்ணெயின் நாற்றம் கலந்த காற்றை மோருவதிலேயே அதிக விருப்பமுண்டாகின்றது. கெரோசின் எண்ணெய்க் கிணறுகளினின்றும், மற்றுமெங்கும் பரந்த அந்த எண்ணெயினின்றும் எழுகின்ற ஆவியானது வெகு சீக்கிரத்தில் பற்றி யெரியும் தன்மை யுடையது. வெடி மருந்துக் கிடங்குகளில் வாசம் பண்ணுவதைப் பார்க்கிலும், இந்தக் கெரோசின் எண்ணெய்ப் பட்டணங்களில் வாசம் பண்ணுவது மிகவும் அபாயத்திற்கு இடமான தென்கின்றனர். ஆயினும் எண்ணெய் எடுக்க அங்கு வேலைசெய்கிறவர்கள் சுருட்டு குடிப்பதை மட்டும் நிறுத்துவதில்லையாம்.

---

நம்முடைய விளக்கு சற்றே அவிந்தால், இங்கிலாந்தின் விளக்கிலே பற்றவைத்துக்கொள்ளலாகாதா? இதனால் பிரிட்டிஷ் ஒளி குறையாது— உலகத்தின் ஒளி அதிகப்படும்.

# ஓர் ரகசிய விவாகம்.



இடது கையிலிருந்த பொடிடப்பியை வலது கைவிரல்களால் எடுத்து உதறி தர்க்காலங்கார சாஸ்திரிகள் தமது மூக்கில் உரத்த சத்தத்துடன் எற்றினர். உடனே கண்களை விஸ்தரித்து "இவ்வித ரஹஸ்ய விவாகம் செய்வானேன்:" என்று கேட்டார்.

கேள்விக்கு விடையளிக்க ராமகோபாலன் விநயத்துடன், தாங்கள் குலபுரோகிதர்கள். தங்களிடம் ஸங்கதியை ஒளிக்க இஷ்டமில்லை; உங்களின் தந்தை எங்களின் ஸம்சார விசாரங்களை நன்ருய் அறிந்தவர்; ஸ்வர்ணலதா என்னுடைய பெண்ணல்லவென்பதைத் தாங்கள் அறிந்திருக்கிறீர்களா? என்ருன்.

தர்க்காலங்காரர் ஆச்சரியத்துடன் "இதென்ன விந்தை! நான் எதும் அறியேன். உங்கள் பெண்ணென்றே நினைத்திருக்கிறேன்" என்ருர்.

ராம கோபாலன்:—ஸ்வர்ணலதா என்னுடைய சிறிய தம்பியான நவீன கோபாலின் மகள். நவீன கோபாலன் ஓர் பெயர் வாய்ந்த பிரம்ம சமாஜஸ்தன் என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள்.

தர்க்காலங்காரர்:—உன்னுடைய கடைசித் தம்பி விக்கிரகாராதனையைக் கைவிட்டு பிரம்ம ஸமாஜியாய்த் தன் குடும்பத்தோடு வீட்டைவிட்டுச் சென்ருனென்று காலமான என் பிதா சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ராமகோபாலன்:—ஸ்வர்ணலதா பிறந்த ஒன்றரை வயதில் நவீன கோபாலனுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. எனக்கு ஸந்தானப் பிராப்தியில்லாததால் என்மனைவி ஸ்வர்ணலதாவை ஆசையோடும் வளர்த்தாள். ஸ்வர்ணலதாவுக்கு ஐந்துவயது நிறையும்பொழுது நவீன கோபாலன் தன் பங்குக்கிருந்த வீடு நிலம் முதலியவற்றை எனக்கு விக்கிரயம் செய்து வீட்டைவிட்டகன்ருன். பெண்மட்டும் என் மனைவியைவிட்டுப் பிரியவில்லை. வளர்த்த வாஞ்சையால் குழந்தையை என் பத்தினி தன்னிடமே வைத்துக்கொண்டாள். என்னையே தந்தையென்றும், என் மனைவியே கர்ப்பதாரிணியென்றும் ஸ்வர்ணலதா தெரிந்துகொண்டிருந்தாள்.

தர்க்கா:—நல்லது. இத்தனை இரகஸ்யமாய்க் கல்யாணம் செய்வானேன்?

ராம்:—அதற்கொரு காரணமுண்டு. இப்பொழுது நவீன கோபாலன் தன் குமாரத்தியைத் தன்னிடம் விட்டுவிடும்படி கேட்கிருன். ஆனல். அதை அவன் அதிகமாக வற்புறுத்தாததற்கு காரணம் எனக்குள்ள ஆஸ்திமுழுதும் ஸ்வர்ணலதாவையே சேருமென்ற எண்ணத்தினல்தான். ஹிந்துக்களின் வழக்கப்படி சிறு வயதில் கல்யாணம் செய்ய அவனுக்கு

---

நசுக்கப்பட்ட எளியவன் வலியவனுக்குச் செய்யும் தீமையானது, வலியவன் எளியவனுக்குச் செய்கிற பகைமைக்கு நிகராகவும் கைகூடும்.

இஷ்டமில்லை. அவன் அறிந்தால் கல்யாணத்தை நடவாதபடி தடைசெய்வான். மேலும், தன்னைப்போன்று பிரம்ம ஸமாஜத்தைத் தழுவிய ஒரு யுவகனுக்கே தன் பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்றும் அவன் தீர்மானித்திருக்கிறான். அது எனக்குப் பிரியமில்லாததால், அவனுக்காக விவாகத்தை ரகஸ்யத்தில் நடத்த வேண்டியிருக்கிறது.

ஃ

சாஸ்திரிகள் சிறிது ஆலோசித்து இரண்டு மூன்று முறை மூக்குத்தூளேற்றிய பின்பு பெண்ணுக்கு வயதென்ன வென்றார்.

ராமகோபாலன்:—12 - வயதாயிற்று. என் தம்பி இளம்வயதில் ஹிந்து மதானுஸாரமாய் விவாகம் செய்தால் தான் பிரம்ம ஸமாஜத்தில் தலை குனியவேண்டு மென்கிறான்.

தர்க்காலங்காரர்:—பெண்ணுக்குக் கன்யாகாலம் கடந்துபோயிற்று. இனி காலதாமதம் செய்வது சரியில்லை. ஏகாந்தமாய் விவாகம் செய்துவிடு. பாத்திரனெங்கே யிருக்கிறான்?

ராம:—பாத்திரன் என் வீட்டிலேயே இருக்கிறான். பாத்திரனுடைய தகப்பன் எனக்குப் பிரிய சிநேகிதன். அவன் மத வைராக்கியனாய்த் தன்னிடமிருந்த ஸ்வல்ப சொத்துக்களையும் தன் குமாரனையும் என்னிடம் ஒப்புவித்துவிட்டுத் துறவியாகிவிட்டான். பாத்திரனுக்குத் தாயாருமில்லை. நான்தான் அவனது ஸம்ரக்ஷகன். மிகுந்த விவேகியாய் உயர்தரப் படிப்புக்குக் காலேஜில் வாசித்துக்கொண்டிருக்கிறான். இந்தக் கல்யாணத்துக்காக நான் அவனை என் வீட்டுக்கு அழைத்துவந்திருக்கிறேன்.

தர்க்கா:—பாத்திரன் ஸுபாத்திரன் தானே?

ராம:—ஆம். ஸர்வ சிரேஷ்டன். எனக்கு மித்திரனுடைய குமாரன் என்று மட்டுமல்ல; மிகவும் நெருங்கிய உறவும் உள்ளவன். அவனை வரவழைக்கிறேன்; அவனுடன் பேச வேண்டிய சில விஷயங்களுண்டு; உங்களின் முன்பாகவே வார்த்தையாடுவது நலம்.

ஃ

இவ்விதம் கூறி, நரேந்திரா! என்று கூவினான். 18-வயதுள்ள யுவகனொருவன் அங்கு வந்தான். ராமகோபாலன் நரேந்திரனைப் பார்த்து, புரோஹிதரை வணங்கும்படி தெரிவித்தான். நரேந்திரன் புரோகிதருக்கு ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தான். அவரும் ஆசீர்வாதம் செய்தார். ராமகோபால் அவனை நோக்கி, "நான் உன்னை என் அபிமான புத்திரனாக நினைத்துள்ளேன். உனக்கு ஸ்வர்ணலதாவைக்கொடுத்து மணம்செய்யப்போகிறேன். நீ அவளை நேசித்திருப்பதையும் அறிவேன். ஆனால், நீ ஒரு பிரதிஞ்ஞை செய்ய வேண்டும்" என்றான்.

நரேந்திரன் "என்ன உத்திரவோ வெளியிடுங்கள்" என்று ஸந்தோஷத்துடன் கூறினான்.

ராமகோபால் சற்று சிந்தித்து, "நான் மரணாபாயத்திற்கு நெருங்கும் வரையில் நீ விவாக விஷயத்தை வெளியிடக்கூடாது. கல்யாணமான பிறகு எனக்குப் பிராணாபாயம் உண்டானாலொழிய என் வீட்டுக்கு நீ வரலாகாது. நல்லகாலம் பிராப்தமாகும் வரையில் காத்திருந்து பிறகு நீ

---

பழி வாங்குவதுபோலிருக்கிற ஒரு செய்கை எவ்வளவு நியாயமுள்ளதானாலும் அது நல்லதாகாது.

விவாக விஷயத்தை வெளியிட்டு என் ஆஸ்தியை உன் மனைவியுடன் கூடி அநுபவிக்கலாம். மணம்முடிந்தவுடன் அலகாபாதுக்குச் சென்று என் பந்துக்களின் வீட்டில் இருப்பாயாக. உனக்கு வேண்டிய பணம் தருகிறேன். அங்குள்ள காலேஜில் படிக்க வேண்டும். இதற்கு சம்மதமா?" என்றான்.

நரேந்திரன் அதிக வணக்கத்துடன் "எப்படி சொல்லுகிறீர்களோ அவ்விதம் நடக்கக் காத்திருக்கிறேன்" என்றான்.

ராமகோபால்:— நல்லது, நீ போகலாம்.

ஃ

நரேந்திரன் சென்றான். தர்க்காலங்காரர் "அப்படியானால் நாளைக்குத் தினம் நன்றாயிருக்கிறது. விவாகத்தை நடத்திவிடலாம் என,

ராமகோபால்:— இன்னொரு வார்த்தையுண்டு. விவாகம் என் வீட்டில் நடக்கக்கூடாது. எல்லாம் சித்தப்படுத்துகிறேன். வேண்டிய பணம் காசுகளைத் தங்களிடம் தருகிறேன். என் தம்பி அதிமூர்க்கனானதால் விவாகம் என் வீட்டில் நடத்தாமல் காளி கோவிலில் முடிக்கவேண்டும். கூடினவரையில் ரகசியமாய் நடக்கும்படி செய்யுங்கள். இதுதான் என்னுடைய இஷ்டம் என்றான்.

புரோகிதர் கொஞ்சம் யோசித்து சந்தோஷத்துடன், நீ கவலைப்படாதே, எல்லாம் என் பொறுப்பாயிற்று என்றார்.

ஃ

மறுதினம் இரவு இரண்டாம் ஜாமத்தில் சாமபுரக்கிராமத்தில் ரேவதீ நதிக்கரையிலிருந்த காளிகாலயத்தில் அத்யந்த ரகஸ்யமாய் விவாக காரியம் முடிந்தது. நரேந்திரன் ஸ்வர்ணலதாவின் கரஸ்பர்சத்தால் ஆநந்திதனானான். கன்னிகையின் தந்தை ராமகோபால் ஸந்துஷ்டனானான். புரோகிதருக்கு வேண்டிய பணமூட்டை கிடைத்ததால் மிக்க பரவசம் கொண்டார். புரோகிதர், ராமகோபால், நரேந்திரன், ஸ்வர்ணலதா நால்வரும் சேர்ந்து சில அந்தரங்க ஸாக்ஷிகளோடும் கையொப்பமிட்ட விவாகபத்திர மொன்றையும் தயாரித்து நரேந்திரனிடம் கொடுக்கப்பட்டது. தெய்வ கிருபையால் எவ்வித கலகமுமின்றி ராமகோபாலின் எண்ணம் ஈடேறிற்று. மூன்று தினங்கட்குப் பிறகு நரேந்திரன் விடைபெற்று அலகாபாதுக்குச் சென்றான். ஸ்வர்ணலதா ராமகோபாலிடம் இருந்துவந்தாள். பிரிந்த ஸதிபதிகள் எப்பொழுது சந்திப்பதோ! அது இறைவன் செயல்.

(தொடரும்.)

---

மெய்யான செல்வமும் வலிமையும் வேண்டினால், நோக்கத்தைத் தன்னுள்ளே செலுத்தவேண்டும். ஆபத்து வரும்பொழுது தைரியமிழந்து போகாமல் காக்கும் பயிற்சி வேண்டும். மரணத்தை இகழும் பயிற்சி தேவை. உடன் வாழும் மனிதருக்கு நாம் எண்ணற்ற கடமைகள் செலுத்தவேண்டுமென்ற பயிற்சி வேண்டும். பின்ன வஸ்துக்களில் அகண்ட வஸ்துவைப் பார்ப்பதான பயிற்சி வேண்டும்.

---

நமக்குள் உயிரும் பலமும் உள. மேல் தோல்தான் வாடிவிட்டது. அதை நீக்கிவிடுவோம்; அல்லது புதுப்பித்துக்கொள்வோம்.




சுந்தர் :—இந்தத் தைலத்தை அம்மாவின் நெஞ்சிலே தேய்த்து விடு.

மீனாக்ஷி,—நீதான் தேய்த்துவிடு அண்ணா. நீ முன்பு அம்மா மடியில் உட்கார்ந்துகொண்டு பால்குடித்த இடம் தானே. தொட்டால் என்ன?

❀

பாதிரியார் :—இரக்ஷிப்பு அடைய வழி வேண்டுமா? அஞ்ஞானிகளுடைய மதங்களை நம்பாதீர்கள். பரிசுத்த கிறிஸ்துமதம் ஒன்று தவிர, மற்ற மதங்கள்யாவும் பொய். தேவகுமாரனாகிய இயேசுகிறிஸ்து உலகத்தாருக்காகப் பாவங்களைச் சுமந்து சிலுவையில் இறந்தார். நீங்கள் இரக்ஷிப்படைவதற்கு கர்த்தராகிய இயேசுவை வேண்டுங்கள்.

பிரஸங்கம் கேட்பவன் :—நான் இதோ கடன் வாரண்டில் பிடிபட்டிருக்கிறேன். என் கடன்தொகையை நீங்கள் கொடுத்துதவி எனக்கு இந்த லௌகிக ஆபத்திலிருந்து இரக்ஷிப்பு அடைய வழி காட்ட முடியுமா?

❀

கணவன் :—குழந்தை ஏன் அப்படிக் கதறிக்கதறி அழுகிறான்?

இளைய மனைவி :—அதிக சாதம் வைத்து விட்டேனென்று அழுகிறான்.

மூத்தாள் குழந்தை :—இல்லையப்பா! நான் உருளைக்கிழங்கை மறுபடி கேட்டதற்கு என் தலையில் ஒங்கிக் குட்டிற்று. என் அம்மா இருந்தால் கொடுத்திருக்கும். வலி தாள முடியவில்லை (என்று மீண்டும் அழுதான்.)

❀

ருக்கு :—ஏண்டி, ராமு, நகை செய்தாச்சுதா?

ராமு :—அவரிடம் இப்போது பணமில்லையாம். எங்கும் கடனும்.

ருக்கு :—போடிபோ. வேளா வேளைக்குச் சாதம் ஆக்காமல் படுத்துக் கொண்டு, சிடு சிடுத்து, 'அழைத்தால்' போகாமல் பிகுவைக் காட்டினால், நாளைக்கே நகை தயாராகி விடுமே. நீ ஒன்றும் தெரியாத மூடம்.

ராமு :—நீ அப்படி உன் வீட்டுக்காரரை ஆட்டியதால் தான் அவர் எலும்புக்கூடாகிக் கடவுளிடம் போய் விட்டார்! அதை எனக்கும் சொல்லிக்கொடுக்க வந்தாயா?

❀

ராமச்சந்திரன் :—அவருக்கு எத்தனையோ கடிதங்கள் எழுதியும் பதில் வரவில்லை. நேரில் போனால்மட்டும் வெகு பிரியமாய்ப் பேசுகிறார்.

பத்மநாபன் :—ஒரு பத்து ரூபாநோட்டை அத்துடன் அயர் செலவுக்கு உதவும்படி அனுப்பி யிருந்தால் உடனே விசயமாய்ப் பதில் வந்திருக்குமே!

ஃ

குப்பு :— அவருடைய புதிய நாவல் வெளியாய் விட்டதா?

சுப்பு :—ஏண்டாப்பா அவ்வளவு அவசரம்? இலவசத்தில் நக்கவா?

ஃ



மனைவி :—சாம்பார் எப்படியிருக்கு? நன்றாயிருக்கா?

கணவன் :—புசித்துக்கொண்டே உன் குணத்தைப்போல் நன்றாயிருக்கு?

மனைவி :—எப்பொழுதும் இப்படியே சொல்லுகிறீர்கள். அப்படி நான் குணத்தில் என்ன கெட்டுப்போனது?

கணவன்:—சாப்பிடும்போது பழய குப்பைகளைக் கிளறி, அதில் ஒரு கலகம் வர வேண்டாம். பொழுதுமுடிந்து இரவு புசிப்பான பிறகு இதற்குப் பதில் சொல்லுகிறேன். அப்போது சண்டைவந்தாலும் அது தூக்கத்தோடு போய்விடும். அதுவே பகற்பொழுது சமாதானமாகப் போக வழி.

நாதன் :—ஊரிலிருந்து வந்த அந்த அன்னிய மனிதன் யார்? வீட்டுப் பெண்களிடமெல்லாம் பேசுகிறாரே? வீடுமுழுதும் தாராளமாய் உலாவுகிறாரே?

வேதன் :— அவர்தான் என் தாயாரின் பர்த்தா—என் தகப்பனார்.

ஃ

கிருஷ்ண தீக்ஷிதர் :—அந்தப் பெண் தங்கள் குமார்த்தியா? விவாகம் எப்போது?

வேங்கு தீக்ஷிதர் :—அவள் என் மனைவி; மூன்றாந்தாரம்! கண்மூடிப் போய் விட்டவளுக்குப் பதிலாக வீட்டு வேலைகளுக்கு வேறு மனுஷி வேண்டுமல்லவா?

கிருஷ்ண தீக்ஷிதர் :—பெண் என்றால் வீட்டு வேலைகளுக்குத்தானா பிறந்தாள்? அவளுக்கு உலக இன்ப ஆசைகள் எதுவும் கிடையாதா? இந்தக் கிழ நாற்றத்தை அந்தச் சிறுமி எப்படி சகிப்பாள்? ஐயோ! பாவம்! 60-வயதில் ஒரு சிறுமியின் விருப்பங்களைத் திருப்திசெய்ய முடியுமா?

ஃ

ஒரு மாற்றாந்தாய் தன் மூத்தாளின் குமாரன் வீட்டிற்கு வந்த சமயம், அங்கு தோசை சுடக்கண்டு, இவர்களும் காபி—பலகார வாழ்விலாயிருக்கிறார்க

சென்ற எரிச்சலுடன், அங்கு சுட்டு வைத்திருந்த தோசைகளில் பத்து பன்னிரண்டுபோல் எடுத்துத் தெருவில் பிச்சைக்கு வந்தவர்களுக்கெல்லாம் கொடுத்தான். அதைக் கண்டு ரூத்திர மடைந்த,

மூந்நாள் குமாரனின் மனைவி :—ஏன் இப்படிக் கண்ட பேருக்கெல்லாம் கொடுக்கிறீர்கள்? அந்தத் தோசைகள் இருந்தால் என் பிள்ளைகள் தின்பார்களே. அதை ஏன் அப்படிக் கொடுத்தொழிக்கவேணும்?

பொறாமை பிடித்த மாற்றாந்தாய் :—என் வீட்டிலிருந்தால் எல்லாருக்கும் தான தருமம் பண்ணுவேன். இது பிறத்தியார் வீடு. அதனால் தான் இப்படிச் சொல்லிக்காட்டினாயோ?

மூந்நாள் குமாரனின் மனைவி:—நான் உங்களைப்போலப் பணக்காரியல்ல. நான் ஏழை. கடை அரிசி வாங்கி உலையிலே போட்டுச் சமைத்துச் சாப்பிடுகிறவள்.

மாற்றாந்தாய் :—இந்தத் தரித்திரம் பிடித்த வீட்டுக்கு நான் ஏன் வந்தேனோ? இதோ இப்பொழுதேபோய் விடுகிறேன். எத்தனை நாளைக்குக் காபி பலகார வாழ்வோ—அதையும் பார்த்து விடுகிறேன். இந்த அற்ப தோசைக்கு இப்படி நாய் போலக் குலைக்க வந்து விட்டாயே. போடி போ.

என்று வைதுக் கோபித்தவளாக, அந்த வீட்டின் செழிப்பைக் காண மனம்சகிக்காமல் அப்பொழுதே தன் மூட்டைகளைக் கட்டிக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டாள். தெய்வமே என்று சமாதானத்தோடும் தனது வீட்டிலிருக்கையில் வலிய வருகிற சண்டையைப் பார்த்தீர்களா?

ஃ

மாதவன் :—ஏன் இன்று சமையல் ஆகவில்லையா?

கிருஷ்ணன் :—மனைவியால் கலகம். அவள் சமைக்கவில்லை. இன்றைய செலவும் மிச்சமாயிற்று. என் பெண் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் சமைப்பாள். உப்பு மோரு சாதம் போதும். இது தான் விவாக வைபவம்.

ஃ




நாதமுனி தாஸர் நெடுநாளாக மீசையுடன் இருந்தார். பிறகு மீசையை எடுத்து விட்டார். அவரைக் கண்ட,

கோவிந்ததாஸர்:—ஏன் தாங்கள் மீசையை எடுத்துவிட்டீர்கள்? நன்றாயில்லையே?

நாதமுனி தாஸர் :-தங்களைப் போன்ற பாகவதனாக ஆகிவிட நினைத்துத் தான். மீசை இல்லாவிட்டால் பாகவத கோஷ்டியிலும், பெருமாள் உடையவர் ஸந்நிதியிலும் இன்னும் கொஞ்சம் அதிகமாகப் பொங்கல் சுண்டல் பிரஸாதங்கள் கிடைக்குமல்

லவா? அங்கங்கே நடக்கிற திருநக்ஷத்திர ததியாராதனை விசேஷங்கட்கும் அழைப்பார்களல்லவா? அந்த லாபத்தைப் பார்க்கையில் மீசை ஒரு பெரியதாகுமா?

ஃ



க்ஷவரம் செய்துகொள்பவர் :—அட முட்டாள், ஏனடா இவ்வளவு அவசரம்? மூக்குக்குள் காயம் பட்டு ரத்தம் வந்துவிட்டதே. இப்படித்தானா க்ஷவரம் செய்கிறது? பொடி போடுகிற மூக்காயிற்றே. எரியுமே.

நாவிதன் :—மூக்குக்குள் என் கத்தியிருக்கையில் நீங்கள் என்னவோ மனதுக்குள்ளே நினைத்துத் திடீரென்று சிரித்துக் குலுங்கினால் காயம் படாமலிருக்குமா?

ஃ

முநீகாயி :—உன் வீட்டுக்காரர் பிழைக்கமாட்டார் போலிருக்கே. உனக்கு என்ன ஏற்பாடு என்று இப்போதே ஒரு வார்த்தை கேட்டு விடுகிறதுதானே.

முநகாயி :—எல்லாம் கேட்டானது. வக்கீலுக்கும் சொல்லி ஏற்பாடு செய்திருக்கிறார். ஒரு சமயம் கண்மூடி விட்டால், உங்கள் வீட்டுக்காரர் தமது நிலங்கள் மேல் வாங்கியிருக்கிற கடனுக்கு நிலங்களை ஜப்தி செய்து வழக்கிட்டு, அந்த நிலங்களைக் கைப்பற்றிக்கொண்டு அதில் ஜீவிக்கச்சொன்னார்.

ஃ

தகப்பனார் :—என் தந்தைக்குத் திதி என்றால் அதற்காக நீ பள்ளிக்கூடம் போகாமல் நின்று விடுகிறதா?

குமாரன் :—"தகப்பனாருக்குத் திதி" என்று உபாத்தியாயரிடம் சொன்னேன். அப்படியானால் வீட்டுக்குப்போ என்று அனுப்பிவிட்டார். யாருடைய தகப்பனாருக்கென்று சொல்லவில்லை.




## 3. இல்லறம்.

(559-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 311. "புதுப்புடவையிலே பொறி பட்டாற்போல"

பழைய புடவையைவிடப் புதுப் புடவை உடனே தீப்பிடித்துக்கொள்ளும். புதிதாக வீட்டுக்கு வருகிற பெண்ணிடம் அற்ப சொற்பத்திற்கெல்லாம் பெரிய குற்றங்களாகப் பேசி அவளை வாட்டி வதைப்பது பல இடத்திலுமுண்டு. அதனால் அப்புதிய பெண்ணுக்கு அவர்களிடம் ஆழ்ந்த துவேஷம் ஏற்பட்டு, அதைக் காலக்கிரமத்திலே சிறுகச்சிறுகக் காட்டத்தொடங்கி வெறுக்கவும் தலைப்பட்டு வேறு மனுஷியாக மாறி விடுகிறாள். இன்று அவள் புதுப் பெண்ணானாலும், அவளைப்பழித்துக் குற்றம் பேசுவோரெல்லாம் சில நாளைக்கே அந்த தங்கைப்பிறகு வெளியேறி அவரவர்கள் வீடுகட்குப் போய்விடவேண்டியவர்களே. அப்பால் வீட்டுக்கு மகாராணியாய் அரசு செலுத்துபவள் இப்புதுப் பெண்ணே என்பதையும் மனதில் வைத்து வீணே குற்றம் பேசாது அன்புடனும் நின்று ஆதரவான வார்த்தைகள்கூறி, அப்பெண்ணுக்குத் தாங்களெல்லாம் மிகவும் வேண்டியவர்களாக நடந்து கொள்வதே பின்னுக்குப் பேதப்படாமல் என்றைக்கும் அன்னியோன்னியப்பட்டு நிற்க ஏதுவாக இருக்கும். அப்புதுப் பெண்ணும் தன் மீது அன்புள்ளவர்களோடு கலந்து பேத எண்ணமின்றி ஒற்றுமைப்பட்டு வாழ்வாள். வீட்டுக்குத் தீபமாக ஒரு பெண்ணைக்கொண்டு வந்துவிட்டுப் பிறகு பல பல குற்றம் பேசி ஹிம்ஸிப்பதானது புதுப்புடவையில் சீக்கிரம் தீப்பிடிப்பதற்குச் சமமேயாகும்.

### 312. "ஒருவருக்கு நிறைவும் குறைவும் ஊழ்வினைப்பயன்."

ஒரே தாய் வயிற்றில் பிறந்த இருபெண்களில் தமக்கை மஞ்சள் குங்குமத்துடன் ஐசுவரியஸம்பன்னையாய் வெகு காலம் வாழ்கின்றாள். தங்கையோ விவாகம் நடந்த ஆறாவது மாதத்தில் பர்த்தாவை யிழந்து, மற்றொரு ஆறாவது மாதத்தில் தானும் கடவுளிடம் சென்று விடுகிறாள். எந்த சுகமும் அனுபவிக்கவில்லை. இது ஊழ்வினைப்பயனல்லாது வேறென்ன? எத்தனையோ பேருக்கு சொந்தத் தாய்போய் மாற்றாந்தாய் வந்து கண் கலங்கும்படியாகிறது. தான் வீட்டுக்கு ஒரே ஆண்பிள்ளை என்ற செல்வாக்குபோய் தன் தந்தையின் இரண்டாந்தாரத்துக்குப் பல மக்கள் பிறந்து தன் ஒருவனுக்கே கிடைக்கவேண்டிய சொத்துக்கள் பலருக்கும் பங்கிடப்பட்டுத் தனக்கு ஒரு சிறு அளவே கிடைக்கின்றது. எவ்வளவோ தேடியும் யாவும் எப்படி எப்படியோ போய்க் கடைசியில் தரித்திரதிசையிற் கஷ்டப்படுவதும் பூர்வ வினைப்பயனே. எதற்கும் சகித்துக்கொண்டு குடித்தனத்தை நடத்திப்போகும்படியாகிறது.

### 313. "ஒன்றும் அற்ற நாரிக்கு ஒன்பதுநாள் சடங்கு"

ஆமாம். இது உலகவாழ்வில் நடக்கும் விநோதங்களில் ஒன்று. உயிருடன் வாழ்ந்த காலத்தில் எட்டிப் பார்ப்பார் எவருமில்லை. உதவிக்கு வந்த

வர்களுமில்லே. ஒருவேளே அன்னமிட்டவர்களுமில்லே. பாயுடன் படுத்துக் கொண்டதற்கு ஒரு வைத்தியனை அழைத்துவந்து சகாயம் செய்தோரையும் காணேம். எந்தத் திக்கும் உதவியும் இல்லாமல் ஒண்டியாய்க் கிடந்து பிராணன் போகிறது. உயிர்போன பின்பு அநாதையாய்க் கிடந்தவளுக்கு நான் சொந்தக்காரன். நீ சொந்தக்காரன் என்று வெகு கூட்டங் கிளம்புகிறது. ஏராளமான செலவில் தடபுடலாகச் சவம் மசானத்துக்குச் செல்கிறது. ஒன்பது பத்துநாள் சடங்குகளும் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு செய்கிருர்கள். உயிரோடிருந்த நாளில் எட்டிப்பாராதவன் இப்போது நான்தான் முதல் பாத்தியஸ்தன் என்கிருன். இது செத்த பிறகு வருகிற செல்வாக்கு !

314. "கஞ்சிவார்க்க ஆளில்லாமற்போனுலும் கச்சைகட்ட ஆளிருக்கிறது."

313-வது பழமொழிக்குக் கூறியது இதற்கும் பொருந்தும். கைச்செல விட்டு உதவிசெய்யப் பின்வாங்கினுலும், துணைக்கு மனுஷாளாய் வந்து உதவவும், ஒரு விவகாரத்தில் தன் பக்கமாய் இருந்துபேசவும்; ஒரு சண்டை சச்சரவு சமயத்தில் தனக்கு உதவியாக இருக்கவும் சில மனிதர்கள் ஒருவனுக்கு இருப்பது—அவன் தைரியத்துடன் உலக கஷ்டங்களைத் தாங்கிப் பொறுத்துக்கொள்வதற்கு ஒத்தாசையாக இருக்கும். கஞ்சிவார்க்க மனுஷ்யர்கள் இல்லாவிடினும் தன் பக்கமாயிருந்து பேசுவதற்காவது மனுஷ்ய பலம் இருக்கிறதென்பது மனதுக்கு ஒரு ஆறுதலேயும் திடத்தையும் துணிவையும் உண்டுபண்ணும். குடித்தனத்திற்கு இவ்விதம் மனுஷ்ய பலம் இருப்பது ஒரு பெரும் சகாயமாகவும் இருக்கும்.

315. "கசிந்து வந்தவன் கண்ணேத் துடை."

பிறரது துன்பத்திற்கு இரங்கி ஆறுதல்சொல்லுவது இல்வாழ்க்கையில் ஒவ்வொருவரும் அனுஷ்டிக்கவேண்டிய முக்கிய கடமையாகும். தன் வீட்டில் சண்டையிட்டுக்கொண்டு கண்ணீருடன் நமது வீட்டிற்கு வந்தால் அவர்களுக்குத் தேறுதல்கூறி அவர்களின் பிரியம்போல் நம் வீட்டிலிருந்து செல்வதற்கு உதவிசெய்யவேண்டும். பிறர் துன்பங்களுக்கு நாம் இரங்கி உருகி உதவினுல்தான் கடவுளும் நமக்கு இரங்கி அனுக்கிரகம் செய்வார். பிறரது கஷ்டத்தில் கல்மனமாய் ஒதுங்கிக்கொண்டவர்கள் நல்ல வாழ்வு வாழ்ந்ததில்லே.

316. "ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமி."

ஓடிப்போக இருக்கிற பிராணனே உடலில் ஒட்டியிருந்து வாழும்படி செய்ய எவ்வளவோ பேர் இரவுபகலாய்க் கண்விழித்திருந்து பாயிற்படுத்தவனுக்கு அவனது நோய்க்கு எவ்வளவோ வைத்திய பரிகாரம் செய்கிருர்கள். கப்பல் முழுகிவிடாமற் காக்கப்படுவதும், பாயிற் படுத்தவர் சுகப்பட்டு எழுந்திருப்பதும் கடவுளின் செயல்போல்தான் நடக்கும். ஆனுலும், ஒன்பது மாலுமிகள் இருந்து ஓட்டைக்கப்பலே முழுகாதபடி தடுக்க உதவிக்கு ஓடிவந்ததுபோல், பாயிற் படுத்தவனுக்கும் பத்துபேர் கூடி நின்று எல்லா வைத்திய உதவியும் செய்து துணேயாயிருப்பது புண்ணியமாகும். நாம் செய்ய வேண்டியதைச் செய்துவிடுவோம். பிறகு ஈசன்செயல்போல் முடியட்டும்.

317. "ஓடி ஒன்பது பணம் சம்பாதிப்பதிலும், உட்கார்ந்து ஒரு பணம் சம்பாதிப்பது நன்று."

எடுத்த முதலிலேயே தேசம்விட்டு மறுதேசம்போய் ஒன்பது பணம் சம்பாதிக்க நினைக்கிற புத்தி கூடாது. அது பேராசையாகவே முடியும். தன் எண்ணம் நிறைவேறி வெளிநாட்டில் ஏராளமாகச் சம்பாதித்தாலும், அதற்குத் தகுந்த செலவுகளும் ஏற்பட்டுக் கையில் மிஞ்சுவது சொற்பமாகவே ஆகிவிடும். இவ்விதம் ஓடிப்பிழைக்க நினைப்பதைவிட்டுத் தன்னூரிலும் பக்கத்தூரிலும் உட்கார்ந்து தன் வகையாரின் மத்தியிலிருந்து பணம் தேடப்பார்ப்பது—அது சொற்ப பணமாயிருந்தாலும் தன்னவர்களோடு கூடியிருந்து சந்தோஷமாய் வாழ்கிற பெருமையைத்தரும். ஒண்டியாய்த் திக்கற்று அன்னிய நாட்டில் கிடப்பதைவிடத் தன்னூரில் ஏதோ ஒரு ஸம்பாத்தியத்துடன் மனைவி மக்களின் அருகில் இருப்பது மேலாகுமென்று இந்தப் பழமொழி குறிப்பிடுகிறது. இதிலும் உண்மையில்லாது போகவில்லை. (தொடரும்.)







# தனக்கும் உலகுக்கும் செய்யவேண்டிய கடமைகள்.



தன் பொருட்டாகவும், தன்னை நம்பியிருப்பவர்களின் பொருட்டாகவும் தான் செய்ய வேண்டியிருக்கிற கடமைகளை ஒருவன் முதலிற் செய்யவேண்டும். பிறகு உலகத்தாருக்குச் செய்யவேண்டிய கடமைகளைப் புரியவேண்டும். முதலில் தன்னைப் பலப்படுத்திக் கொண்டு, தான் சரியாக ஊன்றிக் கொண்டு, பின்னர் உலகத்தாரையும் பலப்படுத்தப் பிரயத்தனிக்கவேண்டும். முதலில் கட்டிடத்திற்கு அஸ்திவாரம் இடவேண்டும்; இது தன் சொந்தக் கடமைகளைச் செய்வதற்கு ஒப்பாகும். அஸ்திவாரமிட்ட பின்பு மேல் கட்டிடங்கள் கட்டுவதுபோலத் தன் சொந்தக் கடமைகளுக்குப் பிறகு உலகத்திற்குத் தான் புரியவேண்டிய கடமைகளில் சிரத்தைகொள்ளவேண்டும்.

ஃ

இவ்வுலகத்தில் ஒவ்வொருவனும் அவசியமாய் ஏதாவது ஒரு வேலை செய்யவேண்டியிருக்கிறது. நமது வாழ்நாள் முழுதும் ஏதாவது ஒரு வேலையைக் கைக்கொள்ளவும், அவற்றுள் முக்கியமாய் நமக்கு மாத்திரமேயன்றிப் பிறர்க்கு உபயோகமான நற்செய்கையையே கைக்கொள்ளவும் விருப்பமுடையோராகி அதை விடாமற் செய்து வருவது நல்ல நடக்கைக்கு அடையாளமாம். ஒவ்வொருவனும் உழைப்பதற்குப் பிறந்திருக்கிறானேயன்றி சோம்பித் திரிவதற்குப் பிறக்கவில்லை. "சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்" என்று உலக வசனம். சோம்பலானது எல்லாப் பெருமைகளையும் அழித்து எப்படிப்பட்டவரையும் நடைப்பிணமாகச் செய்யவல்லது. ஆகலின், இவ்வுலகிலுள்ளோர் அனைவரும் இச்சோம்பலாகிய பெருங் கொள்ளை நோய்க்குத் தப்பித்து எப்போதும் உழைத்தபடியே இருக்கவேண்டும். ஒருவனது கடமைகளை உழைப்புதான் பூர்த்தி செய்து முடித்துக்கொடுக்கின்றது.

ஃ

பசு பக்ஷி மிருகாதிகளாகிய பிராணிவர்க்கங்கள் ஒரே விதமான செய்கைகளையே மாற்றி மாற்றிச் செய்கின்றன. ஏனெனில், அவைகளுக்குத் தேவையும் அதிகமில்லை; புதிதாய் ஒன்றைக் கற்பிக்கும் திறமையும் கிடையாது. அவைகள் செய்கின்ற காரியங்கள் விசித்திரமானவைகளாய் இருந்தாலும், அவை புதிதாய் ஒன்றைக் கற்பிக்கின்றனவென்பதும், ஒன்றை மாற்றி வேறுவிதமாகச் செய்கின்றனவென்பதுமில்லை. நீர் நாய்கள் இப்பொழுது தமக்கு எவ்விதமான மண் வீடுகளைக் கட்டிக் கொள்கின்றனவோ, அத்தன்மையான வீடுகளையே அநேகமாயிரம் வருஷங்களுக்கு முன்னும் நிருமித்துக்கொண்டு வந்தன. பறவைகள் இப்பொழுது கட்டுகின்ற மாதிரி

---

அதர்மத்தால் மனிதன் ஏறுகிறான்; அதனால் நலங்கள் காண்கிறான்; அதனால் எதிரிகளை அழிக்கிறான்; அதனால் பின்பு தானே வேருடன் கெடுகிறான். கடைசியில் தர்மம் தலை நிமிர்கிறது.

யான கூடுகளை ஆயிரம் வருஷங்களுக்கு முன்னும் கட்டிக்கொண்டு வந்தன. சிலந்திகள் இப்போது நிருமிக்கின்ற மாதிரியாய் விசித்திரமான நூற்கோட்டைகளை எக்காலத்தும் நிருமித்துக்கொண்டன. அவை எக்காலத்தும் எவையும் புதிதாய்க் கற்றுக்கொண்டன வென்பதில்லை. அவைகட்கு வேண்டியனவெல்லாம் காற்று மழைகளுக்குத் தங்க இடமும் பசிக்குப்போஜனமு மாத்திரமேயாம். ஆதலால், அவைகள் அதிகமாய்க் கற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை யல்லவா? இத்தன்மையான காட்டு மிருகங்களைப்போலவே, சிறிதும் சீர்திருத்த மில்லாதவர்களாக வசிக்கின்ற மனித ஜாதியாரும் சிலருண்டு. இந்த நாகரீகமற்ற காட்டு மனிதர்களைப்போல நாம் ஆகவேண்டாம். மனிதர்களென்றால், உலகில் சீர்திருத்தமும் நாகரீகமும் பெற்ற மனிதர்களேயாம். நாம் நாகரீக மனிதர்களாகவேண்டுமெனில், ஒவ்வொருவரும் தம் திறமைக்கேற்ற ஏதாவதொரு தொழிலைக் கைக்கொண்டு, தம்மாலியன்றவளவு அத்தொழிலைச் செம்மையாகச் செய்து தாமும் பயனடைந்து உலகத்தாருக்குரிய கடமையையும் செய்யவேண்டும்.

ஃ

ஒவ்வொரு வீட்டிலும் உள்ளவர்கள் அனைவரும் அவரவர் செய்யவேண்டிய கடமைகளைத் தவறாமல் செய்துகொண்டு ஒருவரையொருவர் உண்மையாக நேசித்து வருவார்களானால், அதுவே அனைவரும் மனமகிழ்ந்து வாழ்வதற்கேற்ற வீடாகும். இவ்வுலகமாகிய பெருவீட்டில் மன்னுயிர்கள் வாழவேண்டிய வாழ்வும் இத்தன்மையதுதான். இவ்வுலகத்திலுள்ளவர்கள் அனைவரும் அவரவர் செய்யவேண்டிய காரியங்களைச் சரியாகச் செய்து, ஒருவருக்கொருவர் நேசமுள்ளவர்களாய் இருந்தாலல்லது இவ்வுலக வாழ்க்கையும் இன்பம் தருவதாகாது. ஆயினும், நாம் உலகிலுள்ள அனைவரையும் மனதுகலந்து நேசிக்க, பிரீதிக்க முடிகிறதா? இல்லை. நமக்கு மிகவும் நெருங்கிய பந்துக்களாயும், நெருங்கிய நேசர்களாயும் இருப்பவர்களைப் போல, அவ்வளவு அன்பாக மற்றவர்களை நேசிக்க முடியாதாயினும், பொதுவாக, எல்லோரிடத்திலும் ஈவிரக்கம் பூததயை பச்சாத்தாபம் முதலிய உள்ளன்பு உடையவர்களாயிருக்க முயலவேண்டும். உலகத்தாரனைவரையும் ஒன்றாய்ப் பிணைப்பது இத்தன்மையான நல்லெண்ணங்களும் தருமகாரியங்களுமேயாம். இந்த நற்செய்கைகளே லோகோபகாரமான செய்கைகளாம். ஆகவே, நாம் நன்றாக உழைத்து நமது கடமைகளைச் செய்பவர்களாயும், எல்லோரிடத்திலும் நெஞ்சுருக்க முள்ளவர்களாயும், தனித்து வாழ்வதைவிட்டுக் கூடி வாழ்வதிலேயே களிப்புடையவர்களாயும், நம்மால் கூடியவரையில் பிறர்க்கு உதவிசெய்து சௌக்கியமுண்டாக்க விருப்பமுடையவர்களாயும் இருக்கக்கடவோம். இவைகளே தனக்கும் உலகுக்கும் செய்யும் கடமைகளாகும்.

---

நமக்குள்ளே சில்லறைச் சண்டை, அற்பப்பகை, அற்பப் பொறாமைகளுக்கெல்லாம் இதுவன்று காலம். இருட்டு மூலைக்குள் உட்கார்ந்துகொண்டு நம்மை நாமே மஹான்களென்று பாவனை செய்வதிற் பயனில்லை. உலகத்தாரின் சபைகளில் நம்முடைய கர்வம் பரிஹஸிக்கப்பட்டு மிகு கேவலமாகச் சிறுமைப்படுத்தப்படுகிறது.

---

வழி காட்டுகிற ஜாதிக்கு கஷ்டம்; பின்னே வருகிற ஜாதிக்கு சுலபம்.

# வெட்கத்தின் வேகம்.



ஜன சமூகத்தில் நாம் நடக்கும் மாதிரியை மாற்றுவதில் வெட்கமே முதன்மையாக நிற்கின்றது. நமது மனோபாவங்கள் எவற்றினும் இதுவே வன்மை மிகுந்ததென உறுதியாய்க் கூறலாம். கெட்ட காரியங்கள் நடைபெறுவதையும் அது நன்கு தடுக்கும் சக்தி வாய்ந்ததென்பதில் நாம் எவ்வளவும் ஐயம் கொள்ளவேண்டியதில்லை. பிறருடைய இகழ்ச்சிக்காளாவதைப்பற்றி எண்ணும்பொழுதே மனிதர்கள் நடுக்கமுற்று, சுற்றிலுமிருப்பவர்கள் தங்கள் முகக் குறியினாலும், சிறிது வெளிப்படையாகவும் அதிருப்தியைக் காட்ட, அதை நேரக்கூடாத ஒரு பெரிய துரதிர்ஷ்டமெனப் பாவிப்பதை நாம் அநேக முறை கண்டிருக்கிறோம். தம்முடன் இருப்பவர்களைவிடத் தங்களின் ஸ்திதி எவ்வளவு மேம்பட்டிருப்பினுங்கூட, ஜனங்கள் பிறர் தம்மைப்பற்றிக் கூறும் அபவாதத்திற்கு அஞ்சி தமது மனஸாக்ஷிக்கு விரோதமான வழிகளையும் அனுஸரிக்கத் துணிவார்கள். ஏனெனில் இவ்வெட்கமானது மனிதர்களைப் பிசகுகளிழைப்பதினின்றும் தடுப்பதுபோலவே, மனதுக்குப் பிடித்த விவேகமான நேர்வழியை அனுஸரிக்க வொட்டாமலும் செய்துவிடுகின்றது. மனத் தூய்மையின் விருத்திக்கு வெட்கம் ஒரு காரணமாக இருந்து நன்மை செய்யவும் காண்கிறோம். வெட்கப்பட்டுக்கொண்டு ஒரு நல்லதைச் செய்யப் பின் வாங்கிக்கொண்டு விடுவதையும் காண்கிறோம்.

ஃ

பிறரது பழிப்புக்கு வெட்கமானது நம்மை அஞ்சச்செய்கிறது. வெட்கமானது பெண்களுக்கு ஒரு பெரிய காவலாயிருந்து கற்பைக் காக்கின்றது. ஒருவனுடைய வெட்கப்படுந் தன்மையை ஒருபோதும் சிதைய விடக்கூடாது. வெட்கத்தை விட்டவன் பிறரது கேவலத்திற்கு அஞ்சாத கொடியவனாகி விடக்கூடும். பத்து பெயர்களின் முன்னிலையில் ஒருவனை வெட்கப்படும்படி செய்வதிலும் கொடிய தண்டனை வேறில்லை. அதிலிருந்து ஏற்படும் விரோதம் எவ்வளவோ பொல்லாங்குகளை விளைவித்துவிடும்.

ஃ

நமது செயலன்னியில் நேர்ந்துள்ளவைகளை நாம் மானஹீனமாய்க்கொண்டு வருந்துவது சகஜமே. இழிவான பிறப்பாவது, ஈசுவரன் அமைக்கும் அங்கங்களிலுள்ள குறைவாவது, மற்றும் லோகத்தாரின் மதிப்பிற்குத் தாழ்மையுண்டாக்கும் கீழ்ஸ்திதியாவது ஒருவன் செயலுக்கு அடங்கி யுள்ளனவோ? அது தெய்வச்செயலாயினும், இந்த இழிவுகளினின்றும் தோன்றும் மானக்கேடானது நம் ஸந்தோஷத்

---

அடிக்கத் தெரிந்தவனுக்கு வெற்றி யில்லை, சரியானபடி சாகத் தெரிந்தவனுக்கே வெற்றி யுண்டாம். துன்பம் விளைவிப்பவன் அழிவான். துன்பப்படுவோன் மஹிமைப்படுவான்.

தையே கெடுத்து ஜன்மம் முழுமையுமே நாம் வருத்தமுறக் காரணமாகி விடுகிறது இந்த அவமானம் நமது குணக்குறைவினால் உண்டானதல்ல. நம் சக்தியினாலும், நன்னடைக்கையாலும், மற்ற காலஸ்திதி வர்த்தமானங்களினாலும் நமக்கு முற்றிலும் கிடைக்கத்தக்கதேயென்று நாம் எண்ணும் ஒரு கௌரவத்தை நாம் பெறுமற்போவது அதிர்ஷ்டத்தின் ஓர் குற்றமே. நமக்குரியதான மதிப்பை நாம் அடைய முடியாமற் போவதுபற்றி நமக்குள்ளேயே வெட்க முறுகின்றோம். பிறர் நம்மை ஒரு வெற்றியான செயலுக்காக கௌரவிக்க வேண்டியதுபோக, நாம் அடைந்த நஷ்டதோல்விகளுக்காக நம்மிடம் அனுதாபம் கொள்ளும்படி நேர்ந்து கொள்வது நம்மையே வெட்கத்துடன் நொந்து கொள்ளும்படிச் செய்கின்றது.

ஃ

இவ்வெட்கமானது எப்பொழுதும் பிறருடைய அபிப்பிராயங்களைப் பற்றியுள்ள நமது பயத்திலிருந்தேதான் தோன்றுகின்றதோவெனில், அப்படியும் சில சமயம் இருக்கலாமானாலும் ஒருவன் தன்னைப் பற்றியே உண்மையில் நிச்சயித்துடனிருந்தால் அப்பொழுது பிறருக்குப் பயப்படுவதையோ வெட்கப்படுவதையோ விட்டுவிட்டுத் தன் மனதுக்கு நியாயம் என்று பட்ட காரியத்தையே துணிவுடன் செய்து நிறைவேற்றி விடவும் வல்லவனாகி விடுவதும் கூடும் தான் செய்யும் ஓர் நற் கருமத்தைப்பற்றி, நாணமுற்றபோதிலும், அதை யொட்டியே தன் ஜீவிய முழுதுமுள்ளதென்றறிந்தால், அப்பொழுது சிறிதும் பயமற்றவனாய், மற்றவர் தன்னைப்பற்றிக் கூறுவதை யொன்றும் சட்டை செய்யாமலே யிருப்பான். பெரிய குடும்பத்திலுதித்தும் அல்பமான தொழிலை ஆரம்பிக்குமாறு தரித்திரதிசை யிருந்தால், அதற்காகப் பிறர் ஏளனம் செய்வார்களென்று வெட்கப்படாத மனோதைரியசாலியானவன், அந்த அல்ப தொழிலிலிருந்தே தனது ஓயா முயற்சியால் மகோன்னத நிலைமையும் பெற நாடுவான் அத்தகையோன் பிறர் முன்னிலையில் வெட்கப்பட மாட்டான். சில சமயங்களில் மனிதர்கள் பக்தி மார்க்கத்தை நாடும் தங்களின் உயர்ந்த நோக்கங்களை வெளியிட்டுச் சொல்லப் பின்னடைவது—அவர்கள் அவைகளைப் பற்றி வெட்க மடைவதனாலென்று நாம் கருதலாகாது. பிறகு யாதெனில் தாங்கள் கூறியவற்றிற்கு பின்பு தாங்கள் தகுதி யற்றவர்களாய் விடுவோமோவென்று அவர்கள் கொள்ளும் அச்சமும் உறுதியின்மையுமே அப்படித் தங்களைப் பகிரங்கமாக வெளியிட்டுக்கொள்ள வெட்கப்படும்படி செய்கிறது. மொத்த பாகத்துக்கு இந்த வெட்கம் என்பதான மனோபாவமானது புரியும் செயல்கள் உலகில் அதிகமாகவே தென்படுகின்றன. தாய் தன் குழந்தையினிடத்துள்ள பிரேமையால் தன் மார்பக வெட்கத்தை மறக்கிறாள். காதலர் இருவரும் வெட்கம் மறந்து ஈருடலும் ஓருயிருமாகின்றனர். துறவியோ வெட்கம் என்பதிலிருந்து முழுதுமே விடுதலை பெற்று விடுகிறான். பெரிய சபையில் பேச வெட்கப்படுவோன் தன் கல்வி ஞானத்தைத் தக்க தருணத்தில் மறந்தோ, அல்லது உபயோகிக்கவோ தவறிவிடுகிறான். வெட்கமானது நன்மைக்கும் தீமைக்கும் காரணமாயினும், நன்மையையே அதிகம் செய்வதாயுள்ளது.






1. சிலர் தாங்கள் செய்த காரியங்களையே வெகுவாகச் சிலாகித்துப் புகழ்வர். மற்றவர்களின் மிகவும் அரியசெய்கைகள்கூட இவர்களுக்கு அற்பமாகவே தோற்றும்.

2. நாம் ஒரு கடை திறக்க நிச்சயித்து அதற்கு வேண்டிய பூர்வாங்க ஏற்பாடுகளை இரகஸ்யமாகச் செய்து வர, மற்றொருவர் தற்செயலாக அவ் வியாபாரத்தைத் துவக்கிவிடுகிறார். பின்னர் நாம் ஏங்கி வேறுதொழிலைச் செய்ய நேருவதுமுண்டு. இங்கு அவர் நம்மை வஞ்சித்ததாகக் கொள்ள இடமில்லை. இவ்விதமே, ஒரே ஆங்கில நாவலை இருவரோ மூவரோ வெவ்வேறு தமிழ்ப் பெயர்களுடன் ஒருவரை ஒருவர் அறியாமலே மொழி பெயர்த்து வெளியிட்டுவிட்டதுமுண்டு.

3. ஒருவர் தன்னுடைய துன்பங்களை வெளியிட்டு ஆற்றிக்கொள்ள நினைத்துக் கூறும் வார்த்தைகள் ஒவ்வொன்றையும் உள்ளுக்குள் மிகவும் சந்தோஷத்துடன் கேட்டுவிட்டு, வெளிக்குமட்டில் மிக்க வாடியது போல்துயரடைந்தமுகம் காண்பித்து நடிப்பர். உலகில் உண்மையுள்ளத்தோடு கேட்டு இரக்கப்படுவோரும் உதவுவோரும் எங்கோ ஒருவர் தான்.

4. சிலர் குருவிகளைப் பிடித்துத் தலைகீழாகத்தூக்கியும் உச்சிமயிரைப் பற்றியும் குழந்தைகளுக்கு விளையாட்டுக் காட்டுவதை நாம் பார்க்கிறோம். வாயில்லா ஏழைக் குருவிகள் படும் கஷ்டத்தை இந்த மதிகெட்ட மூடர்கள் அறிவதில்லை.

5. வர்த்தகசாலையின் சொந்தக்காரர் அங்குள்ள குமாஸ்தா முதலியவர்களிடம் எந்தயோசனையும் கேட்டு அவர்கள் இஷ்டம்போல் நடந்து வருபவராயிருப்பின், தங்களின் அரிய உதவியினாலேயே வர்த்தகம் வளர்ச்சியடைந்து வருகிறதெனக் கருதி முதலாளியைக் கொஞ்சமும் மதியாது மீறுவர். ஆகையால், எதிலும் அவர்களுடன் ஒரு அளவுடன் பேசி ஒதுங்கித் தமது சுயயோசனையுடன் காரியங்களை நடத்துவதே மேல்.

6. உனக்கு அந்த ஆள் வேலைக்குத் தேவையானால் காலத்தைக் குறிப்பிட்டு அன்று வரும்படி கூறி அனுப்பிவிடு. அல்லது பிடித்தமில்லாவிடில் அதையும் அன்றே நவின்று விடுவது நலம். அப்படிக்கின்றி இன்று நாளை பிறகு என்று பல நாள் அலையவிட்டுப் பின்னர் மறுப்பது தருமமல்ல. உன்னிடத்தில் வேலைக்கு அமர்ந்த பின்னர் பணம் பெற்றுக் கொடுக்கலாமென எண்ணிக்கொண்டு அந்த ஏழைமனிதன் கடையில் கடனாக அரிசி முதலியவற்றைப் பெற்று உண்டிருக்கவும் கூடும். குடும்பப்பாடுகளை யார்கண்டார்! பிறர் கஷ்டத்தில் எப்பொழுதும் உன் மனதை வைத்துப் பார்த்துக் கருணையுடன் நட.

7. உன் நண்பன் அல்லது உறவினனுக்கு ஒரு சாமானை இனமாகக் கொடுக்க எண்ணி எடுத்துச் செல்

---

பிறர் சினத்தையும், மூடர் நகைப்பையும் கருதாமல், தோல்விக்கஞ்சாமல், ஆண்மை காட்டும் ஆண்மக்கள் இப்போது நமக்கு வேண்டும்.

லும்போது மூடிக்கொண்டு போவதில், உன்னைத் தூரக் காணும்போதே அந்தப் பொருள் யாதென்று அந்த நண்பனுக்கு ஒரு ஆவல் உதிக்கும். திறந்திருப்பினோ அந்த ஆவலுக்கு இடமின்றி முன்னமே கண்டு அதில் ருசியற்றுப்போகவும் செய்யும்.

8. நாடகசாலைகளில் முன்திரையின்றித் தங்கள் சீன்களை சோடித்துக் காட்டுவார்களானால், அதில் ஒரு ஆவல் ருசி ஜனங்களுக்குத் தோன்ற ஞாயமில்லை. மூடித் திறப்பதிலுள்ள இடைநேரத்தின் பெருமையே பெருமை.

9. காலையிலெழுந்து தினசரிப் பத்திரிகைப் பிரதி யொன்றைப் பெற்ற வியாபாரி தன்னுடைய விளம்பரம் அல்லது பருவவிலைப் பத்தியையும், சட்ட சபை மெம்பர் தான் முதல்நாள் சபையில் செய்த அரிய பிரசங்கத்தையும், பரீட்சைகொடுத்த மாணவன் தன்னுடைய தேறிய எண்ணையும் சிறுசெய்தி அனுப்பியவர் செய்தித் திரட்டையும் இப்படியே அவரவர் விரும்பியவைகளை முதலில் ஆவலுடன் பிரித்துப் படித்துப் பார்த்த பின்னரே மற்றவைகளை நோக்குவர். முதலில் அவரவரது ஆத்திரம் தீர்ந்த பின்னரே மற்றது.

10. உன் கடையிலிருக்கிற வைழல்கள் மற்றவர்களின் கண்களுக்கே முதலில்படும். அவைகளை நீ அறிந்துகொள்ள நீண்டநாள் சென்றுவிடுவது முண்டு. ஒருசமயம் நீ நஷ்டப்பட்டுவிட்ட கடைசி காலத்தில் தான் உனக்குத் தெரியும்படியாகவும் இருக்கும்.

11. பெரும்பாலும் வியபாரக் கம்பெனி ஒன்றிலுள்ள பெண்ணின் சிரிப்பு நீ ஒரு சிறு சாமானுவது வாங்க வைத்துவிட வேண்டு மென்பதற்கேயாகும். அதற்கு நீ வேறு பொருள்கொண்டு மயங்கி ஆசை கொண்டு அல்லலுறவேண்டாம்.

12. பெரிய மனிதரை ஒரு காரியார்த்தமாகப் பல முறை அவர் வீட்டுக்குச் சென்றும் கண்டு கொள்ள முடியாமலேபோக, பின்னர் ஒருநாள் சந்திக்க நேர்ந்தபோது அவர் இன்று நேரமில்லை, மறுநாள் வரும்படி கூறுகிறார். நாற்காலியில் உட்கார்ந்தபடி பதில் சுலபமாய்ச் சொல்லி விடுகிறவர்களுக்கு நின்று கொண்டிருப்பவர்களுடையவும், நெடுந்தூரம் நடந்து அலுத்து வந்து பதில் வார்த்தையை எதிர் பார்க்கிறவர்களுடையவும் கஷ்டங்கள் தெரிகின்றதா?

சி. வீ. நா. நாராயணன்செட்டியார்-

நேமத்தான்பட்டி.



ஓரிடத்தில் லக்ஷக்கணக்கான ஜனங்கள் ஆணும் பெண்ணுமாக ஸ்தல தரிசனம் செய்து புண்ணியம் தேடப் போயிருந்தனர். பாதையோரத்தில் ஒருவன் சாகக்கிடந்தான். அவனுடைய ஜாதி இன்னதென்று தெரியாத காரணத்தால் அவனுக்கு யாரும் தாகத்துக்கு ஜலம் கொடுப்பாரில்லை. பெருஞ் செலவு செய்து புண்ணியம் தேடப்போகும் இவர்களுடைய நாட்டு பக்தி எத்தனை அழகாகத் தோன்றியபோதிலும், இவர்களுடைய இரக்கமற்ற தன்மை எத்தனை பயங்கரமானது பார்த்தீர்களா?

---

நவீன உலகத்தில் ஜனத்தின் ஜீவசக்திக்கும், ஜாதியின் நிபந்தனைகளுக்கும் இப்போது கடும் போர் நடக்கின்றது.




## கடவுளின் மௌன விசித்திரம்

(539-ம் பக்கத் தொடர்ச்சி.)

### II



எவ்விதம் தன் குமாரனின் பேருக்கு இருக்கும் வீட்டைப் பேரப்பிள்ளைகளின் பேருக்கு மாற்றிக் கொள்வதென்று தாய் தன் பேரப்பிள்ளைகளுடனும், அப்பிள்ளைகளின் தந்தையுடனும் யோசித்து, தன் குமாரனை வஞ்சகமாய் ஏமாற்றி விடுவதென்று தந்திரமான ஒரு சூழ்ச்சி தேடுகிறாள். அந்த சூழ்ச்சியின்படி வீட்டைத் தன் குமாரனுக்கும் இரு பேரப்பிள்ளைகளுக்கும் சொந்தமாக்கிப் புதிதாய் ஒரு உயில் பத்திரம் தயார் செய்யப்படுகிறது. அப்பத்திரத்தை எழுதுவதற்கு வேறெவரும் கிடைக்கவில்லை யென்றும், "நீ தான் அப்பா எழுதவேண்டும்" . என்றும் பேரப்பிள்ளைகளின் தந்தை இந்தக் குமாரனுக்குச் சொல்லுகிறான். அவ்விதம் சொல்லும் வேளையில் அன்று இந்தக் குமாரனிடம் உண்ட அன்னம் அந்தப் பேரப்பிள்ளையின் தந்தையினுடைய வயிற்றிலிருந்தும் துரோக புத்தியுடனேயே இவ்விதம் வஞ்சகமாய்க் கூறுகிறான். தாயும் வேறெவரும் இல்லாததால் நீயே பத்திரம் எழுது என்று சொல்லுகிறாள். தான் அந்தப் பத்திரத்தைத் தன் கைப்பட எழுதக் கூடாதென்ற வியவகார ஞானம் இக்குமாரனுக்குத் தெரியவில்லை. முன் பத்திரத்தின்படி வீடானது இக்குமாரனுக்கும் இவனது பின் ஸந்ததிகளுக்கும் பாத்தியப்படுத்தி எழுதித் தீர்ந்து போயிருக்கிறது. இந்த சர்வ சுதந்திர பாத்தியதையை இக்குமாரன் உணர்ந்து கொள்ளாமல், முந்திய பத்திரத்தை ரத்து செய்யத் தாயாருக்கு சுதந்திரமுண்டென்று தாய் கூறுவதை நம்பிவிடுகிறான். தன் தாய்க்கு ரத்து செய்ய சுதந்திரமிருக்கும்போது அந்த உயில் பத்திரத்தைத் தான் தன் கைப்பட எழுதுவதில் தவறில்லை யென்று பேதமையோடும் நினைத்துவிடுகிறான். உனக்கு இவ்வீட்டில் எவ்வித பாத்தியதையும் இல்லையென்று தன் தாய் கூறியதையும் உண்மையென்று எண்ணி விடுகிறான். ஆகவே, தாய் எழுதிய முந்திய பத்திரத்தை ரத்து செய்ததாகக் கண்டிருக்கும் புது (ரத்து) பத்திரத்தையும், பிறகு தன் தாய் செய்த புது உயிலையும் தன் கைப்பட மூடத்தனமாய் எழுதி முடிக்கிறான். அந்த உயிலில் இக்குமாரனுக்கும், தன் குமார்த்தியின் பிள்ளைகளுக்கும் அவ் வீட்டைச் சொந்தமாக்கி யிருப்பதாகத் தாய் கண்டிருக்கிறாள். இவ்விதம் இக்குமாரன் எழுதுகையில் தனக்கென்று இருந்த சொந்தமான வீடு

---

நாம் நாசமாகாமல் பிழைக்கவேண்டுமானால் காலசக்தியையும், காலம் செய்யும் திருத்தங்களையும் அறியவேண்டும்.

தன்னை விட்டுப்போய் விடுவதைப் பற்றி எவரும் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடவில்லை யல்லவா என்று தனக்குள்ளேயே சிந்தித்த வாறு உருகுகின்றான்; நெஞ்சம் புண்ணுகின்றான். கடவுளோ மௌனம் சாதித்து நிற்கின்றார். பிறகு இவ்விரண்டு பத்திரங்களும் ரிஜிஸ்தர் செய்யப்படுகின்றன. அவற்றில் இந்தக் குமாரனும் ஒரு சாக்ஷியாகக் கையொப்பம் வைக்கிறான். அந்த சமயத்தில் இந்தக் குமாரன் தன் தாயின் வார்த்தைகளில் நம்பிகை கொள்ளாமல் ஒரு வக்கீலைக் கேட்டிருப்பானாயின், அவர் அவனை வீட்டின் ரத்து பத்திரமும் உயிலும் நீ எழுதவேண்டாமென்று தடுத்துவிட்டிருப்பார். இவன் தன் கைப்பட எழுதிக் கையொப்பமிடாவிடில் தாய் ரத்து பத்திரம் எழுதவோ, வேறு எதுவும் செய்யவோ உரிமை கிடையாது. அப்படிப் பிறகு ரத்துசெய்ய உரிமை வைத்து ஆதி பத்திரம் எழுதப்படவில்லை. ஆகவே, வீடும் இவனுக்கே சொந்தமாய் இருந்திருக்கும். பெற்ற தாயார் என்று நம்பி மோசம்போன விஷயம் இது! ஆயினும், கடவுள் ஒருவர் இருக்கிறார்; அவர் சத்தியவந்தனைக் காக்கக் கூடுமன்றோ?

ஃ

இப்பொழுது வெகு சாமர்த்தியமாய் இக்குமாரனை வஞ்சித்து ஏமாற்றி வெற்றிகொண்டது சரிதான். ஆனால், இந்த வெற்றி என்றைக்குமே நிலைக்குமா? இந்த அநீதிக்குப் பிரதிய "அனுபவிக்கை" என்பது இல்லாது விடுமோ? அக்கிரமம் செய்தவர்கள் பக்கம் தானே கடவுள் இருந்திருக்கின்றார் என்றும், அவர்கள் தானே ஜெயித்தார்களென்றும் நினைக்கலாம். எப்பொழுதும் கடவுளின் செயல் முதலில் தெரிவதில்லை. ஹா! கடவுளே! என்று அலறுங்காலத்திற்கூட அந்த இறைவன் வெளிப்படுவதில்லை. பகவான் மௌனமாய் இருந்து விட்டதாகவே உலகுக்குத் தோற்றுகின்றது. இக்குமாரனை வஞ்சித்து லாப மடைந்தோர் எத்துணையோ உற்சாகத்துடனும் பூரிக்கின்றார்கள். எவ்வளவோ விருந்து கொண்டாட்டங்களை நடத்துகிறார்கள். இந்த ஏழைக்குமாரனை மதிப்போர் எவருமில்லை; ஒரு துரும்பாகவே வெகு அல்பமாக நினைக்கிறார்கள். வீட்டிற்கு வருவார் போவார் முன்னிலையிலெல்லாம் கேவலப்படுத்தப் படுகின்றான். ஏமாற்றியவர்களோ அவனைத் தாக்குவதற்கு வாய்க்கும் எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் நழுவ விடுவதில்லை; சில சமயங்களில் அவனைத் தாக்குவதற்குத் தாங்களே சந்தர்ப்பத்தை சிருஷ்டித்துகொண்டு ஒரு பெருங்கலகம் ஆரம்பித்து விடுவர். எங்கு கைப்பலமும். பணத்தின் செழிப்பும் இருக்கின்றனவோ அந்தப் பக்கமே தான் மற்றவர்களும் சேர்ந்து கொள்வது இயல்பு. எல்லோரும் அக்கிரமம் செய்த தாயாரின் பக்கமே சேர்ந்து விடுகிறார்கள். வஞ்சிக்கப்பட்டு ஏழ்மை யுற்றவன் சார்பில் பரிந்து பேசுவாரெவருமில்லை. அவனுக்காக இரக்கப்படுவோருமில்லை. அவன் பக்கம் துணையாக நின்று உதவுவாருமில்லை. எல்லோரும் அவனது உழைப்பின் அன்னத்தைப் புசித்து அவனுக்கே துரோகிகளாகின்றனர். இது சரியா?—கடவுள்

---

தன்னுள் உறங்கும் சக்திகளை நேரே எழுப்பிவிட வழியும் சௌகரியமும்—எப்போதோ குறித்த ஒரு பொழுதில்தான் திடீரென்று கடவுளின் அருளால் எதிர்ப்படுகின்றது.

இல்லையா?—எனில், தெய்வமோ மௌனம் சாதித்தபடியுள்ளது. இந்தப் பேதமையான குமாரனின் துன்பங்கட்கு முடிவும் உண்டா?—அது என்றேயோ!

ஃ

பல வருஷங்களும் வெகு விரைவிற் செல்லுகின்றன. இதற்குப் பின் எட்டாவது வருடத்தில் ஒரு சம்பவம் நிகழ்கின்றது. தன் குமார்த்தியின் குழந்தைகளே யாவற்றையும் அனுபவிக்க வேண்டுமென்று நினைத்ததற்கு மாருக. அக்குழந்தைகளில் ஒருவன் கடவுளிடம் சென்று விடுகின்றான்; அடுத்த மூன்ருவது வருடத்தில் மிச்சமாய் இருந்த மற்றொருவனும் கண்மூடி விடுகின்றான். தந்திரமாய் குமாரனை வஞ்சித்த அன்னையின் மனம் தன் எண்ணம் நிறைவேருது போயிற்றே என்று ஆத்திரம் பொங்குகின்றது. தன் பேரப்பிள்ளைகள் இருவரும் இறந்து போனமையால், மூவருக்கென்று எழுதியதில் இருவர் போய்விட, மறுபடியும் தன் குமாரனுக்கே தன் உயிலின்படி வீடு சொந்தமாகி விடுவதை அவளால் சகிக்கக் கூடவில்லை. அதைத் தடுப்பதற்காக அந்த உயிலை ரத்து செய்து வேறொரு அன்னிய 'ஆசாமி'பேருக்கு அவ்வீட்டை இந்த அருமைத் தாயார் எழுதி வைத்து, தன் குமாரனுக்கு வீடு கிடைக்காதபடி செய்து விடுகின்ருள்.

ஃ

இதுகாறும் தன் தாயை நம்பி நின்ற குமாரனுக்கு இப்பொழுது புதிய விழிப்பு உண்டாகின்றது. வக்கீலிடம் வீட்டுப்பத்திரங்களைக் காண்பிக்கின்ருன். பின்ஸந்ததிகட்குப் பாத்தியம் வைத்து அவர்கட்கே உரிமையாக்கிய வீட்டுப் பத்திரத்தில் இவன் கையெழுத்திட்டதினுலேயே உரிமை போய்விடாதென்றும், அது மைனர் சொத்தாகுமென்றும் வக்கீல் விளங்கக் கூறி, தாயாருக்கும் லாயர் நோட்டீஸ் தருகிருர். குமாரனும் கோர்ட்டுக்குச் செல்வதற்குச் சித்தமாய்விடுகிருன். இதன் பின்னர் சிலர் மத்தியஸ்தம் பேசிச்சமாதானம் செய்யத் தாயாரும் தன் குமாரனுக்கே அந்த வீட்டை மற்றொரு பத்திரத்தின் மூலமாக உரிமைப்படுத்திவிடுகிருள். பதினைந்து வருஷங்கட்கு முன்பு தன் பேதமையால் கையெழுத்திட்டு இழந்த வீட்டைக் குமாரன் தெய்வத் திருவருளால் இப்போது மீண்டும் கிடைக்கப்பெற்று மனமகிழ்கின்றன். கடவுள் மௌன நிலை கொண்டு மறைந்திருந்தாரென்று முன்பு தோற்றிய தோற்றத்தின் உண்மை இப்பொழுது வெளியாகின்றது. தெய்வம் மௌனம் சாதிக்கவில்லை யென்றும், அக்கிரமஸ்தர்களின் ஆரவாரமும் செயல்களும் எவ்வளவு வரைக்கும் செல்கின்றதென்பதையே கவனித்தபடி இருந்தாரென்றும், முடிவில் அக்கிரமஸ்தர்களின் ஆவலாதிகளை நிறைவேற வொட்டாது தடுத்து, தன் தாயையே முற்றிலும் நம்பிக்கெட்ட சத்திய வந்தனை குமாரனைக் கடைசியில் காத்தருளினுரென்றும் உணர்ந்து கொள்கின்ருேம். ஈன்ற அன்னையின் மகத்தான அன்பைக் குறித்து உலகில் கோடிக்கணக்கான உதாரணங்கள் உண்டெனினும், சில தாய்மார்களின் பிரீதி தன் குமார்த்திகளின் மக்களிடத்துத் தாவிவிட்டபோதும், மகன் செத்தாலும் சாகட்டும்—மருமகள் தாலி

---

ஸம்சயிப்பதே தொழிலாக இருப்பவர்களுக்கு அவநம்பிக்கை அவர்களின் குணத்திலே ஊறிப்போய்விடுகிறது.

யறுத்தாற்போதுமென்று மருகியின் மீது துவேஷம் முதிர்ந்து விட்ட காலத்தும்—தம் வயிற்றுக்குமாரனைப் பூரண விரோதியாகவே கொண்டு வெறுப்பதும் ஆங்காங்கு சாதாரணமாகக் காணும் ஸம்பவங்களில் ஒன்றேயாகும்.

ஃ

வஞ்சகச்சூதில் பாண்டவர்களை வெற்றிகொண்ட துரியோதனன் பாஞ்சாலியின் துகிலையுரிந்து மான பங்கப்படுத்த முயன்றகாலை அந்தப் பெண் தவித்துப் புலம்பியதும், தம் கணவரின் எதிரிலேயே திக்கற்றுக் கதறியதும் இங்கு நினைவு கூறுதல் பொருந்தும். தெய்வமோ மௌன நிலைகொண்டு எங்கோ மறைந்திருந்தது. துரியோதனனாதியோரின் ஆரவாரமே அதிகமாயிற்று. கடைசியாகப் பாஞ்சாலி தான் அதுவரையும் பற்றி நின்ற சேலையின் நுனியையும் விட்டு விட்டு, இருகரங்களையும் சிரசின்மேல் வைத்துக் கடவுளையே கதியாகப்பற்றித் தன்னை மறந்தவளாகிறாள். அதுவரையும் மௌன நிலைகொண்டு நின்ற பகவான் அவள் முன்தோன்றி அவளது துகில் வளர்ந்து பெருகுமாறு செய்து மானங் காத்தருளுகின்றார். இறுதியில் இந்த அக்கிரமத்தின் காரணமாகத் துரியோதனாதியர் தங்கள் வமிஸத்தோடும் ஸர்வநாச மாகின்றனர். கடவுளின் மௌனநிலை கலைய நேரும் வேளை எப்பொழுதென்பதைப் பாஞ்சாலியின் மானம் காக் காக்கப்பட்ட சந்தர்ப்பமானது நன்கு தெரிவிக்கும். அனைக்குச் செய்யும் அக்கிரமங்கள் முற்றி சகிக்கொணாத உச்சிக்கு எட்டிய சமயம் கடவுளும் தமது சக்தியைப் பிரயோகிக்க மௌன நிலை விடுத்து வெளிப்படுகின்றார்; பிறரால் துன்புறுத்தப்பட்ட பேதையை உடனே ரக்ஷித்துக் காக்கின்றார். கடைசி காலத்தில் தான் எங்கும் கடவுள் வெளிப்படுகின்றார். அதுவரையும் அந்த எளியோனுக்குப் பிறர் செய்யும் கொடுமைகள் வஞ்சனைகள் அனைத்தையும் கண்ணோக்கியவாறேயுள்ளார். இன்னும் அன்னோர் அதிகம் ஹிம்ஸித்துப் பாவ மூட்டையைப் பெருக்கிக் கொள்ளவைத்து முடிவில் ஒரேயடியாக ஸர்வநாசம் செய்கின்றார். இதுவே கடவுளினுடைய மௌனத்தின் அற்புதக்காட்சி. பதினைந்து வருஷங்கட்கு முன்பு தன் பேதமையால் ஒரு சத்தியவந்தன் இழந்த சொத்தை மறுபடியும் அவனுக்கே திரும்பக் கிடைக்கச்செய்ததும் கடவுளின் ஒப்பற்றக் கருணையே யன்றோ? அவர் தம்மையே கதியாக நம்பினோரை ரக்ஷிக்கும் விதம் இதனால் ஒருவாறு விளங்கும். பகவான் ஒருபோதும் பராமுகமாய் இருந்துவிடவில்லை; கைவிடவுமில்லை; அவர் மௌனநிலை கொள்ளவுமில்லை. அதற்குரிய காலத்தை நோக்கி நிற்கின்றார். முடிவில் வஞ்சித்துத் துன்புறுத்தியவர்கள் எங்க, உத்தமர்கள் சுகம் பொருந்தி உன்னதம் கொள்ளுகின்றனர். கடவுளை நம்பினோர் கைவிடப்படார். தெய்வத்தின் மௌனநிலை நோக்கி மனம் தளரவேண்டாம். நெஞ்சமே யஞ்சாதே நீ—என்று தமது பிரசங்கத்தை முடித்தார். கையெழுத்திடுவதில் எவ்வளவு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டு மென்பதும், எதுவொன்றையும் வக்கீலைக் கேட்டே செய்யவேண்டு மென்பதும் இதனால் ஒருவாறு அறியலாகும். இத்துடன் நமது கதையும் பூர்த்தி பெற்றது.

பஹதூர் பொன்வண்டு செட்டியார்.






# இராஜ சந்திரன்



(548-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XVI.

பொன்னுசாமி அதிக கோபத்துடன் எதற்காக வாரண்டு என்றான். சில வருஷங்களுக்கு முன்பு நடந்த குமாரசாமி முதலியாரின் கொலைக் கேஸில் சம்பந்தப்பட்டிருப்பதற்காகக் குற்றஞ் சாட்டப்பட்டிருப்பதால் என்றுகூறி அவனுடைய கைகளுக்கு விலங்கிட்டு அழைத்துச்சென்றனர். பொன்னுசாமியின் தேர்தல் கடைசியில் சிறைவாசமாக முடிந்தது. சத்திய தர்மங்களை எதிர்த்துக் கொண்டு நலங்கண்டவர்களில்லை.

---

### அத்தியாயம் 15

---

### புதிய விசாரணை.



பொன்னுசாமியின் வழக்கு ஆரம்பமாயிற்று. போலீஸ் சேவகர்கள் பொன்னுசாமியை நியாயாதிபதியின் முன்னிலையிலிருந்த கூண்டில் நிறுத்தினர். அவன் நாணத்தால் தலை குனிந்து வாடி நின்றான். பொன்னுசாமியின் மீது சாட்டப்பட்டிருந்த குற்றத்தைக் கோர்ட்டார் எடுத்துக்கூறி நீ குற்றவாளியா என்று கேட்டதற்கு, நான் குமாரசாமி முதலியாரைக் கொல்லவில்லை; எனக்கு அந்தக் கேஸ் விஷயமே தெரியாது என்று மெல்லிய குரலுடன் நவின்றான்.

ஃ

நியாயாதிபதி ஜூரிகளை நோக்கி கனம் தங்கிய பிரபுக்களே! இதோ உங்களுக்கு எதிரில் நிற்கும் பொன்னுசாமி என்பவன் சுமார் ஐந்து வருஷங்களுக்கு முன் தங்கவேலு என்று மாறு பெயர் தரித்து, அபிராமி என்ற பெண்ணைக் காதலித்து, சிலகாரணங்களை முன்னிட்டு அவளுடைய தந்தையாகிய குமாரசாமி முதலியாரைக் கொலைசெய்து விட்டதாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறான். அதற்குச் சில ஆதாரவுகளும் சாட்சிகளும் இருக்கின்றன. அவர்கள் எல்லோரும் உங்கள் முன்னிலையில் விசாரணை செய்யப்படுவார்கள். இந்தக் கேசிற்கு வாதியில்லையென நினைத்து சர்க்கார் கொண்டுவந்ததாகப் பாவித்து நடத்தவேண்டியதாயிருக்கிறது என்றார்.

ஃ

முதல் சாக்ஷியாக இராமசாமி விசாரிக்கப்பட்டான்.

கோர்ட்டார்:—இக்கேஸில் உமக்கென்ன தெரியும்?

இராமசாமி:—ஐந்து வருஷங்கட்குமுன்பு இவன் தங்கவேலு என்ற பெயருடன் அபிராமியோடு என் தோட்டத்தில் வந்து அடிக்கடிபேசிக் கொண்டிருந்தான். தங்கவேலு என்ற பெயருடன் அவன் எனக்கு எழுதித் தந்த பிராமிஸரி கோட்டையும், அப்பெயருடனே அவன் அபிராமிக்கு எழுதிய காதற் கடிதங்களையும் கோர்ட்டாரிடம் சேர்ப்பித்திருக்கிறேன். இவன் தனது சைகிளை என் தோட்டத்தில்தான் வைப்பது வழக்கம். இவனேடு நான் சேர்ந்து எடுத்துக்கொண்ட போட்டோ படத்தையும் கோர்ட்டாரிடம் ஒப்புவித்திருக்கிறேன். இவன் அபிராமியை மணக்க அவள் தந்தை ஒப்பவில்லை யென்று என்னிடம் கூறி, குமாரசாமி முதலியாரைக் கண்டபடி என் முன்பு பலதரம் தூஷித்திருக்கிறுன்.

கோர்ட்டார்:—இவன் அபிராமியிடம் பேசுவதும், இவனுடைய பெயர் தங்கவேலு என்பதும் வேறு யாருக்காவது தெரியுமா?

இராமசாமி:—அபிராமியைக் காதலித்து வந்த இராஜசந்திரன் என்ற வாலிபனுக்கும் தெரியும். அவனுக்குத் தங்கவேலு அபிராமியிடம் பேசும்போதெல்லாம் அதிக கோபம் உண்டாகும்.

கோர்ட்டார்:—இவன் எவ்வூரிலிருந்து வருகிறுனென்று விசாரித்தாயா?

இராமசாமி:—தான் பௌரிங்கிப் பேட்டையிலிருந்து வருவதாகத் தங்கவேலுவே என்னிடம் சொன்னதன்றிப் பிராமிஸரி கோட்டிலும் அப்படியே எழுதித் தந்திருக்கிறுன்.

கோர்ட்டார்:—குமாரசாமியின் கொலை நடந்ததினம் தங்கவேலு அபிராமியின் வீட்டில் காணப்பட்டானு?

இராமசாமி:—கொலை இரவில் நடந்தது. அதற்குமுன் மாலையில் தான் என் தோட்டத்தில் அவனும் நானும் படம்பிடித்துக்கொண்டோம். அதில் அபிராமியின் உருவமும் விழுந்திருக்கிறது. பிறகு நான் ஆறு மணிக்கு ரயிலேறிச் சென்றுவிட்டேன். அதன் பிறகே கொலை நடந்தது. அதற்குப் பிறகு சென்ற வாரத்தில் இவனைச் சந்தித்துப் பொன்னுசாமி யென்ற பெயரைக் கேட்டு ஆச்சரியத்துடன், நீ தங்கவேலு அல்லவா என்றதற்கு, வேறு எவரிடமும் தன் பழய பெயரைச் சொல்லாதே என்றுன்.

கோர்ட்டார்:—(குற்றவாளியை நோக்கி) நீ அவ்வாறு பெயரைச் சொல்லவேண்டா மென்றதுண்டா?

பொன்னுசாமி:—ஆம் (என்று மெதுவாகக் கூறினுன்.)

ஃ

அடுத்த சாட்சியாக அபிராமி விசாரிக்கப்பட்டாள்.

கோர்ட்டார்:—உன்தந்தை கொல்லப்பட்டதில் உனக்கு விசனமில்லையா?

அபிராமி:—ஆம், விசனமுண்டாயிற்று. இராஜசந்திரனே கொன்றதாக அறிந்தேன்.

கோர்ட்டார்:—அதை நீ பார்த்தாயா?

அபிராமி:—பார்க்கவில்லை.

கோர்ட்டார் :—உன் தந்தையை உன்னைத் தர மறுத்த கோபத்தால் தங்கவேலு கொன்முனு? நீ அதற்கு உடந்தையாக இருந்தாயா ?

அபிராமி:—என்தந்தையிடம் பேசுவதற்காக உட்சென்முன். நான் அந்த சமயம் வெளியில் கிணற்றில் ஜலம் சேந்திக் கொண்டிருந்தேன். உடனே துப்பாக்கி சத்தம் கேட்டதும் விரைந்து வந்தேன்.

கோர்ட்டார்:—முதலில் உன் வீட்டிற்குள்ளிருந்து வெளிவந்தது யார்?

அபிராமி :—நான் எவரையும் பார்க்கவில்லை.

கோர்ட்டார்:—தங்கவேலு இராஜ சந்திரன்—இவர்களில் எவர் உன் தந்தையின் அறையிலிருந்து முதலில் வெளியே வந்தது?

அபிராமி :—இ ரா ஜ ச ந் திரனே என் தந்தையைக் கொன்றதாக எல்லோரும் கூறினர்கள். அவனும் துப்பாக்கியை எறிந்துவிட்டு ஓடினுன்.

கோர்ட்டார் :—மற்றவர்கள் கூறியதைப்பற்றி உன்னைக் கேட்கவில்லை. துப்பாக்கி சத்தம் கேட்டு நீ ஓடிவந்ததும் முதலில் வெளிவந்தது யார்?

அபிராமி :—(திகைப்புடன்) தங்கவேலுதான் முதலில் என் தந்தையின் அறையிலிருந்து வெளிவந்து உடனே ஸைக்கிளில் ஏறிச்சென்முன்.

கோர்ட்டார் :—அப்போது இராஜசந்திரன் எங்கிருந்தான்?

அபிராமி :—(திகைப்புடன்) கிணற்றுக்கருகில் ஒரு மரத்தின் ஓரமாய் நின்று கொண்டிருந்து, துப்பாக்கி சத்தம் கேட்டதும் எனக்கு முன்பாக விரைந்து என் தந்தையின் அறைக்குள் ஓடினுன்.

கோர்ட்டார் :—முதலில் தங்கவேலு உன் தந்தையின் அறையிலிருந்து வெளிவந்த அதே நிமிஷம் இராஜசந்திரன் உள் நுழைந்தானு?

அபிராமி :—அ ப் ப டி த் தா ன் தோன்றுகிறது.

கோர்ட்டார் :—அப்போது உன் தந்தையைக் கொன்றது இராஜசந்திரனு? தங்கவேலா?

அபிராமி :—இ ரா ஜ ச ந் திரனே கொன்றதாக எல்லோரும் சொன்னுர்கள்.

கோர்ட்டார்:—மற்றவர் சொல்லியதை நீ இங்கு ஒப்புவியாதே. உன் மனதில் பட்டதை மட்டும் சொல்.

அபிராமி :—இராஜசந்திரன்தான் கொன்றிருக்கவேண்டும்.

கோர்ட்டார்:—துப்பாக்கி சத்தம் கேட்டபோது இராஜசந்திரன் ஒரு மரத்தினேரமாய் நின்றுகொண்டு இருந்ததாயும், நீ ஜ ல ம் சே ந் தி க் கொண்டிருந்ததாயும், துப்பாக்கி சத்தம் கேட்ட பிறகே இராஜசந்திரன் உனக்கு முன்விரைந்து உள்ளே ஓடியதாயும் சற்று நேரத்திற்கு முன்பு நீ சொல்லியிருக்கிருய். பொய் கூறினல் தண்டிக்கப்படுவாய்.

அபிராமி :—(திகைப்புடன்) யார் கொன்முர்களோ — தங்கவேலுதான் கொன்முனே-எதையும் நான் நேரில் கண்டவளல்ல.

கோர்ட்டார் :—இராஜ சந்திரன் தன் துப்பாக்கியை உன் தந்தையிடம் தரும்படி உன்னிடம் கொலை நடந்த அன்று மாலையில் கொடுத்தானு ?

அபிராமி :—என் தந்தை வேட்டையாடுவதற்காகக் கேட்டபடியால் இராஜசந்திரன் அவ்விதமே என்னிடம் கொடுத்துத்துப்பாக்கி கெட்டித்திருக்

கிறது. ஜாக்கிரதையாக உன் தந்தையிடம் தந்து விடுவென்றார் அவ்விதமே கொடுத்து விட்டேன். அதற்குப் பிறகும் அவர் போகாமல் ஒரு பக்கமாய் நின்றுகொண்டிருந்தார்.

கோர்ட்டார் :—நீ இராஜசந்திரனைக் காதலித்ததுண்டா?

அபிராமி :—அவர் பெரிய வீட்டுப் பிள்ளையென்றும், இங்கு சம்பந்தம் செய்ய அவரது தகப்பனார் ஒப்பாரென்றும், ஆனதால் அவரிடம் காதல் செலுத்தாதே என்றும் என் தந்தை எனக்குக் கூறினார். அதன்படியே மேலுக்குமட்டும் பிரியமாகப் பேசிவந்தேன். ஆனால், அவரோ என்மேல் மிகுந்த காதலாக இருந்தார்.

கோர்ட்டார் :—நீ காதலித்த தங்கவேலுவைத்தப்புவிப்பதற்காக இராஜசந்திரன் மீது கொலைக்குற்றத்தை மெதுவாகச் சுமத்திவிட்டாயா?

அபிராமி :—அப்படி நான் ஒன்றும் சொல்லவில்லையே.

கோர்ட்டார் :—இராஜ சந்திரன் கொல்லவில்லையென்றும், துப்பாக்கி சத்தம் கேட்டபோது மரத்தின் ஓரமாய் இருந்தானென்றும் ஒப்புக்கொள்கிறாயா?

அபிராமி :—(திகைப்புடன்) ஒப்புக் கொள்கிறேன்.

கோர்ட்டார் :— கொலைக்கு மறுநாள் மாலையில் நீ தங்கவேலுவுடன் சென்னைக்குப் புறப்பட்டுவிட்டாயல்லவா?

அபிராமி :—ஆம், ஊரிலிருக்கப் பயந்து தங்கவேலுவுடன் சென்றுவிட்டேன்.

ஃ

மூன்றாவது சாக்ஷியாக இராஜசந்திரனைக் கோர்ட்டார் அழைக்கவே எல்லோரும் பிரமிப்புடன் எதிர்நோக்கி நிற்க. ஓர் அழகிய வாலிபன் சாக்ஷிக் கூண்டில் ஏறினான். அப்பொழுது. அங்கிருந்த ஸ்ரீநிவாச முதலியார் தமது குமாரனைக் கண்டு பிரமித்தார். அவரை யறியாமலே புத்திர பாசத்தால் வருந்துவோராகி மௌனமாக சகித்து நின்றார்.

கோர்ட்டார் :—நீ ஸ்ரீமான் சினிவாச முதலியாரின் புத்திரனா?

இராஜ சந்திரன்:—ஆம். என்மீதே குமாரசாமி முதலியாரைக் கொன்றதாக முன்பு குற்றஞ் சாட்டப்பட்டிருந்தது.

கோர்ட்டார் :—அக்கொலையைப் பற்றியும். உன் எதிரில் நிற்கும் தற்போதைய குற்றவாளியைப்பற்றியும் உனக்குத் தெரிந்ததைச் சொல்.

இராஜ சந்திரன் :—நான் அபிராமியைக் காதலிப்பதை என் தந்தையறிந்து கோபித்து இனி அந்தப் பக்கமே போகக்கூடாதென்று கண்டித்தார். குமாரசாமி முதலியார் வேட்டையாட என் துப்பாக்கியைக் கேட்டிருந்ததால் மாலையில் என் தந்தைக்குத் தெரியாமல் கொண்டுபோய் அபிராமியிடம் கொடுத்து; துப்பாக்கி கெட்டித்திருக்கிறது என்று எச்சரித்து, அபிராமியை மறுபடி பார்க்க நினைத்து மரத்தினோரமாய் நின்று கொண்டிருந்தேன். அப்பொழுது குண்டு சுட்ட சப்தம் கேட்கவும் திடுக்கிட்டு ஓடினேன். அதேநிமிஷம் தங்கவேலு குமாரசாமியின் அறையிலிருந்தும் வெளியில் ஓடினான். நான் உட்புகுந்ததும் குமாரசாமி முதலியார் குண்டு பட்டு இறந்து கிடப்பதைக் கண்டேன். என் துப்பாக்கியையும் அங்கு காணவே திகில்பட்டுத் துப்பாக்கியுடன் வெளியில் வந்து, பிறகு என்னைப் பலர் துரத்தவே அதை எறிந்துவிட்டு ஓடிவிட்டேன்.

(தொடரும்.) S. G. R.

# நான் பொடிப்பேயின் வசமானது.



பொடி போடுபவர்களைக் கண்டாலே எனக்குள் ஒரு அருவருப்பு தோன்றிக்கொண்டிருந்தது. அது எதற்கோ யானறியேன்! எவனொருவன் முதலில் ஒரு வஸ்துவின் மேல் அருவருப்பு வைக்கிறானோ அதே அவன் தலையில் சுமையாய் விழுவதுபோல் எனக்கும் பொடிப் பேய் பிடிக்க வாரம்பித்தது. எனக்கு மிகவும் வேண்டியவராக இருந்த ஒருவரும் பொடி போடுபவராகவா இருக்கவேண்டும்? எனக்குப் பொடியின் மேல் அத்யந்த துவேஷம் இருந்தாலும், அப்பொடிக்காகவா அவரை வெறுப்பது? அவர் பொடி போடும் போதெல்லாம் விரல்களை மூக்கில் அமுக்கி அதில் சந்தோஷம் மிகுவதையும், அவ்வசிங்கமான மூக்கிலிருந்து எவ்வளவு மூக்குச்சளி வெளி வருகிறதென்று ஒவ்வொரு தடவையும் சிந்தி, அழகு பார்த்துக் கொண்டு அவர் தன் விலையுயர்ந்த நேரத்தில் நாலைந்து நிமிஷங்கள் கழிப்பதையும் நான் பார்க்கச் சகிக்காமல் இரு கண்களையும் இறுக மூடிக் கொள்வேன்; அல்லது பக்கத்தில் நில்லாமல் வெளியே போய்த் திரும்புவேன்.

ஃ

எத்தனை நாளைக்குத்தான் இவ்விதமாக அவருடன் அந்த சொற்ப காலத்திற்கு விரோதியாகி பின் கூடுவதோ என்று என் மனதில் தோன்றிற்று. இதுவே என்னைப் பிடித்த பைசாசத்தின் முதல்படி! அந்த அத்யந்த நண்பரிடத்தில் நான் எவ்வளவு தான் வாதித்தாலும் அவர் இப்பொடி விஷயத்தில் மாத்திரம் தன்னிடம் ஏதும் பேசக்கூடாதென்று ஒரே பேச்சாகச் சொல்லிவிட்டார். பின் நடக்கக்கூடியது என் மனதை மாற்றுவதே. சில நாட்களில் அவர் பொடியைப் போட்டு மூக்கைச் சிந்தி அழகு பார்ப்பதை நானும் அருவருப்பாகக் கொள்ளவில்லை. எனக்கு அது மிகவும் சர்வ சாதாரணமாகி விட்டது. இதற்குத்தான் சகவாச தோஷம் பொல்லாதது என்பது.

ஃ

அவருக்கு நான் மிகவும் வேண்டியவன் என்று சொன்னேனல்லவா! பொடிவாங்கிவந்து அவருக்குச் சமர்ப்பிப்பதை என் வேலையாக அவர் வைத்து விட்டார். நானும் முதலில் பொடிவாங்கி வருவதைக் கஷ்டமாக நினைத்தேனாயினும் பின் பொடி வாங்கிக் கொடுத்துக் கொண்டே வந்தேன். ஒவ்வொரு தடவையும் நான் வாங்கி வந்து அவர் கையில் கொடுத்தவுடன் பரபரப்புடன் பொடி மட்டையை அவிழ்த்து ஒரு சிட்டிகைப் பொடி போட்டுவிட்டு என்னை நோக்கி "இன்று அதிக காரமாயிருக்கிறது; இன்று எங்கு வாங்கினாய்? அல்லது இன்று அவ்வளவு காரமில்லை. பழைய பொடியாக இருக்கிறது நாளைக்கு நேற்று வாங்கின இடத்திலேயே வாங்கு" என்று உபதேசித்துக் கொண்டே வேடிக்கையார்த்தமாக "நீயும் ஒரு சிட்டிகை போட்டுப் பாரேன்" என்பார். நான் அவருடைய வார்த்தைகளைச் செவிகளில் போட்டுக் கொள்வதே யில்லை.

---

"தலையைக் கொண்டுவா"—என்று சொல்லும் ராஜ்ய தந்திரம் சிறிது காலமே உதவும். எக்காலத்துக்கும் உதவாது.

எனக்கு இருந்தாப்போலிருந்து ஜலதோஷம் பிடித்தது. அப்போது தான் எனக்குப் பொடிப்பேய் பிடிக்க ஆரம்பித்ததாக ஞாபகம். ஜல தோஷத்திற்கு எது சரியான மருந்து என்று என் நண்பரைவினவ; அவரும் தன்னிடத்தில் எப்போதும் கையிருப்பிலிருக்கும் ஆப்த ஸஞ்சீவி யும் உற்சாககாரியுமாகிய பொடியே ஜலதோஷத்திற்கு மிகவும் எடுத் தது என்றும், ஒரு சிட்டிகையை அப் போதே போடுவது சாலச் சிறந்த தென்றும் பிரஸங்கித்துவிட்டு தன் வசம் இருந்த டப்பியைத் திறந்து ஒரு சிட்டிகையை எடுத்து என் முன் எந்தினர். ஒரு பெரிய மனிதர், அதுவும் நம் நன்மையைக் கோருபவர் ஆச்சதே என்று அதை மறுக்காது அப்பொடியை என் மூக்கினுள் மிக வும் கஷ்டப்பட்டு போட்டுவிட்டேன். நான் போட்டதுதான் தாமதம். என் கண்கள் இத்துக்க சம்பவத்தை நினைத்துக் கொண்டாற்போல் தாரை தாரையாகக் கண்ணீர் பெருக்கிற்று. மூக்கில் எரிச்சல் பொறுக்க முடிய வில்லே. தும்மல்களோ ஒன்றின்பின் ஒன்ருய் வந்துகொண்டிருந்தன. என்னைப்பார்த்துப்பார்த்துக் குலுங்க நகைத்துக் கொண்டே அப்பெரியா ரும் " அப்பா இந்தா கைக் குட்டை; முதல் தடவை அவ்வாறு தானிருக்கும் " என்று உபசாரம் செய்தார். எனக்குக் கோபம் ஒரு பக் கம். எந்தத் தீய பழக்கமு மில்லா திருக்க வேண்டுமென்ற என் சபதம் வீணுவதா என்ற துக்கம் ஒரு பக்கமுமாக வாட்டலுற்றது. அவரி டம் ஒன்றும் பேசாது என் அறைக்கு விரைந்து நடந்தேன்.

ஃ

அப்பொடியினுல் என் ஜலதோ ஷத் தொந்தரவு சற்று குணமாயிற் றென்பது உண்மையே. அதனுல் பின் னும் அவரிடமே தினமும் ஒரு சிட் டிகை பெற்று ஜலதோஷம் தீரும் வரை போட்டுக்கொண்டே வந்தேன். ஜலதோஷமும் நின்றுவிட்டது. ஆனுல், போடி போடும் வழக்கம் என்னை அவரிடம் பொடிவாங்கிப் போடும்படி தூண்டிற்று. எப்படியும் மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு, அவருக்குத் தினமும் கடை யில் பொடிவாங்கிக் கொண்டு வரு கையில், பொடிக் கடைக்காரனிடம் இனுமாக ஒரு சிட்டிகை பெற்றுப் போட்டுக் கொண்டே வந்தேன். ஒரு நாள் நானும் அப்பெரியாரும் கடை வீதி சென்றிருந்தோம். அப்போது பொடிக் கடைக்கு அவர் கால்கள் தானுகவே சென்றன. நானும் பின் தொடர்ந்தேன். என்னைப் பரிசோ திப்பதற்காக என்னை அவர் பொடி வாங்கும்படி சொன்னுரோ என் னமோ! எனக்கு அப்போது விளங்க வில்லே. பொடி வாங்கி விட்டுத் திரும்புகையில், வழக்கப்படி பொடிக் கடைக்காரன் ஒரு சிட்டிகை எடுத் துக் கொடுத்தான். நானும் வழக்கப் பிரகாரம் அவர் எதிரிலேயே என்னை யறியாமல் நன்ருய்உறிஞ்சிவிட்டேன் அப்போது, " திருட்டுத் தனமாய்ப் பொடி போடுகிறயே! உன்னை பொடி வாங்கிக்கொண்டு வரச் சொன்னுல் பொடிக் கடைக்காரனி

---

தகுதி உண்டானபிறகுதான் மேலான பதவியை விரும்பலாமென்று விதி போட்டால் எந்த ஜாதிக்கும் விடுதலை உண்டாயிராது. இது பிரஸ விக்கத் தெரிந்துகொண்டபிறகே விவாகம் செய்துகொள்ளவேண்டுமென்பது போலாம். பிரஸவிக்கத் தெரியாமலே அதை அறியா நிலேயில் விவாகம் செய்துகொண்டு பலமுறை தவறி விழுந்து தேறிப் பிறகே பிரஸவித்தல் என்பதை அறியும்படி இருக்கிறது. அதை முன்னே அறிவது எப்படி?

படம் ஏன் இரவல் வாங்குகிறாய்? நானே கொடுக்கிறேன்" என்று சொன்னார். அப்போதுதான் அறிந்தேன் அவர் முன்பாக மறைக்க மறந்த என் மூடத்தனத்தை. எல்லாம் நன்மைக்கே நிகழ்கின்றன என்று நினைத்து அது முதல் அவர் முன்பும் பிறர் பின்பும் நான் இப்போது பொடி போடுகிறேன். எப்படி மெதுவாக என்னை பொடிபேய் தன் வசமாக்கி விட்ட பார்த்தீர்களா! இப்போது என்க்குக் குருவாக இருந்த என் பெரியாரைப் போலவே நானும் ஒரு கைக்குட்டையைக் கையிலேந்தி மூக்குச் சளியைச் சிந்தி அழகு பார்க்கிறேன். எல்லாம் சகவாசத்தினு லேற்படுபவைகளன்றோ? பெரியோர் களிடத்திலும் சில தீய வழக்கங்களுண்டென்றும், அதில் நாம் பழகிவிடக் கூடாதென்றும் இப்போது எனக்குத் தோன்றுகிறது.

இப்பொடியைப் போன்றே பல கெட்ட வழக்கங்களில் எத்தனையோ பேர் இழுத்துச் செல்லப்பட்டிருக்கின்றனர். முதல் தடவை மிகவும் கேவலித்துப் பேசியவனே பின் அதை விடாது உட்கொள்கிறான். எல்லாம் முதலிலேயே நம்மிடத்தில் அணுகாது செய்துவிடின் பின் நாம் வருந்துவதற்கு வழியில்லாது போய்விடும். கொஞ்சம் ருசி பார்த்தபின் விட்டுவிடுவது என்பது எளிதான காரியமன்று. ஆகையால் முதலிலேயே இத்தியாதி துர்ப்பழக்கங்களை அகற்ற முற்படவேண்டும்.

S. ஸ்ரீரங்கராஜு,
ஜெகன்னாதபாக், சைதாப்பேட்டை.

அன்புடையீர்,

நான் நடுவில் சிலகாலம் பலயீனமடைந்து மெலிந்து இருந்தபோது என்னை கைதூக்கி என் பசியை யாற்றி திடகாத்திரனாக்கி கொண்டு உங்களை மாதந்தோறும் தவராமல் காணும்படியும் என்னை வளர்க்கும் எஜமான் பிரபலஸ்தரான ஸ்ரீமான் மதுரை இ. மா. கோபாலகிருஷ்ணகோன் அவர்களால் இந்த புதிய ஆண்டு எட்டில் தங்களுக்கு ஒரு அதிர்ஷ்டத்தை பொருத்து ஒரு பிரைஸ் வைத்து இருக்கிறார். இதன் முழு விவரம் இந்த பத்திரிகையின் முதல் பக்கத்திலுள்ள எனது அனுபந்தத்தைப் பார்க்கவும்.

தங்கள் செல்வி,
அமிர்தினி.

ஒரேநாள் இரவில் சீனர் எல்லாரும் தங்களின் பன்றிக் குடுமியை நறுக்கி எறிந்தனர். ஐந்நூறு வருஷத் தாவுதலை ஜப்பான் ஐம்பது வருஷத்தில் தாவிவிட்டது. இந்தியாவிலோ—ஒரு தீண்டாமையின் சாதாரண விஷயம் மிகப் பிரமாதமுடையதாக விவரிக்கப்பட்டு ஆரவாரங்கள் செய்யப்படுகின்றன. இவ்வித பிடிவாதத்தினருக்கு ஸ்வராஜ்யம் ஏது?

# பூ எப்படி மணக்கிறது?



சூரிய ராஜாவின் அனுக்கிரகத்தால் புஷ்பங்கள் ஏராளமாய்ப் பூக்கின்றன. அவற்றுள் அநேகம் அழகிய நிறங்கள் கொண்டவை; அநேகம் நறுமணம் வீசுவன; சில துர் நாற்றம் உள்ளன; வேறு சில நிறமும் மணமும் அற்றன. இதை எல்லாம் நாம் அனைவரும் அறிவோம். புஷ்பத்தைத் தலையில் வைத்துக் கொள்ளும்போது "பூ ஏன் மணக்கிறது?" என்று நாம் சற்றும் விசாரிப்பதில்லை. பூமியில் உண்டாக்கப் பட்டதெல்லாம் கடவுளின் செல்லப் பிள்ளையாகிய மனிதனுடைய சுகத்துக்காகத்தான் என்று இறுமாந்து நடந்து வருகிறோம்.

ஃ

வாஸ்தவத்தில் அப்படித்தானா? எல்லாம் வல்ல கடவுள் நமக்கு இன்பம் தரும் பொருட்டுத்தான் பூவுக்கு மணம் கொடுத்தாரா? அதனால் தான் பூ வாஸனையா யிருக்கிறதா? அப்படியானால், துர் நாற்றமுள்ள பூக்களை ஏன் உண்டாக்கினார்? வாஸனையே இல்லாத பூக்களும் இருக்கின்றனவே அவை எதற்காக?—பின் உண்மை தான் என்ன? இவ் விஷயங்களை எல்லாம் ஆராயப்புகுந்த அறிவாளர் முக்கியமாய் இரண்டு விஷயங்களைப் பரிசிலனை புரிந்தனர். பூ என்ன காரணத்தால் மணக்கிறது என்பது ஒன்று; பூ அவ்வாறு மணப்பது எதற்காக என்பது இரண்டு.

ஃ

பூவின் மணத்துக்கு (அல்லது நாற்றத்துக்கு) காரணம் அதிலுள்ள ஒருவகைத் தைலம் அல்லது எண்ணெயே. வாஸனையுள்ள ஒவ்வொரு புஷ்பத்திலும் இந்த எண்ணெய் காணப் படுகிறது. இது புஷ்பச் செடியினாலேயே உண்டாக்கப் படுகிறது. ஒவ்வொரு செடியும் ஒவ்வொரு வகையான எண்ணெயை உண்டாக்குகிறது. ஒரே இனத்தைச் சேர்ந்த செடிகள் உண்டாக்கும் தைலங்கள் ஏறக்குறைய ஒன்று போலவே இருக்கின்றன. கர்ப்பூரத் தைலம் (Turpentine) என்று சொல்லப்படும் தைலமும் இவ்வாறு ஒரு வகைச்செடியினால் உண்டாக்கப்படும் தைலமே.

ஃ

இவ்விதம் செடிகள் உண்டாக்குகிற தைலம் ஒரு வகையான இரசாயன ஐக்கியப் பொருளாகும். (Compound) இதில் இரண்டே மூலப் பொருள்கள் (Elements) தாம் காணப்படுகின்றனவெனினும், அவை வெகு சிக்கலாக ஒன்றோடொன்று சேர்ந்திருக்கின்றன. அவை கார்பன் (Carbon) என்னும் கரிப்பொருளும், ஹைட்ரஜன் (Hydrogen) என்னும் ஜலஜகை வாயுவுமாம். முன்னது கடினம் அல்லது கட்டிப் பொருள் (Solid). பின்னது ஆவி அல்லதுகாற்றுப்பொருள் (Gas). இதே இரண்டு பொருள்களும் இதே அளவில் வெவ்வேறு விதமாகச் சேர்ந்து வெவ்வேறு ஐக்கியப்

---

தீண்டாமைப் பிரசாரம் காலசக்தியின் ஒரு தூது என்று ஏன் சொல்லக்கூடாது?

பொருள்களை உண்டாக்க வல்லன. அதனால்தான் இவை இதில் சேர்ந்திருக்கிறமாதிரி மிகவும் சிக்கலானதென்று மேலே கூறப்பட்டது

ஃ

இவ்விதமாக இவை இரண்டும் சேர்க்கப்பட்டு உண்டாக்கும் தைலங்கள் பெரும்பாலும் எளிதாகவே காற்றால் குடிக்கப் படுகின்றன. அதாவது. இந்த ஜாதித் தைலங்கள் ஒரு சீசாவில் இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம்; அந்த சீசாவைத் திறந்து வைத்திருந்தால் கொஞ்ச நேரத்திற்குப் பிற்பாடு சீசாவில் துளி கூடத் தைலம் இல்லாததைக் கண்டு திகைப்போம். சீசாவிலிருந்த தைலமெல்லாம் காற்றில் பறந்து மாயமாகிவிடும். அதாவது செடிகள் உண்டாக்குகிற இந்தத் தைலங்கள் நிலைத்துத் தைலமாக இராது. எளிதில் ஆவியாக மாறிக் காற்றோடு கலந்தோடிவிடுகின்றன. அவை யாவும் காற்றோடிகள் (Volatile Substances) என்று சொல்லலாம்

காற்றினால் அப்படிப் பறந்தோடினால் தைலத்தினால் என்ன பிரயோஜனமென்றும். தைலமெல்லாம்வீணாக வல்லவா போய்விடுகிறது என்றும் கேட்கலாம். வாஸ்தவத்தில் அந்தத் தைலம் அப்படி ஆவியாக மாறிக் காற்றில் கலப்பதால் தான் நாம் அதின் வாசனையை உணருகிறோம். (1) தைலம் ஆவியாகிக் காற்றில் கலக்கிறது. (2) தைலஆவி கலந்த காற்றானது காற்றுலாவும்போது நமது மூக்கில் வந்து படுகிறது. (3) மூக்கிலுள்ள நரம்புகள் ஓர் உணர்ச்சியைப் பெற்று அதை நமது மூளையிடம் தெரிவிக்கின்றன. (4) நமது மூளையும் அது ஒருவகை வாசனை என்னும் உணர்ச்சியை நமக்குத் தருகிறது. (5) நாமும் அப்போது தைலத்தின் மணத்தை அறிகிறோம்.

P. N. அப்புஸ்வாமி.

## அது "உத்தரவுடன்" ஒட்டவில்லையாம்!

பிராமணன் ஒருவன் குடத்தில் கொண்டுவரும் ஜலம் அழுக்காக இருப்பதால், குடிக்கத்தகாதென்றும், சண்டாளன் ஒருவன் சுத்தமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டுவந்த நீர் சுத்தமாக இருப்பதால் குடிக்கத்தகும் என்றும் நான் சொன்னால் வெறும்பேசுகிறான் என்று சொல்லி என்னைக் கண்டிப்பார்கள். ஏனெனில், எனது கொள்கை (வைதீக) யஜமானின் "உத்தரவுடன்" ஒட்டவில்லை.

ஒட்டாவிட்டால் என்ன குடி கெட்டுப் போயிற்று? என்று நான் கேட்டால் உடனே என்னை ஜாதியிலிருந்து தள்ளிவிடுவார்கள். என்னை விருந்துக்குக் கூப்பிடமாட்டார்கள். நான் செத்துப்போனால், சாவுக்கிரியைகளுக்குக் கூட வரமாட்டார்கள். இப்படி உலகவாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் குரூரமான கொடுங்கோன்மை நடப்பதனால், ஜனங்களுக்கு நன்மையென்று நம்புவோர் ராஜாங்கத்தில் கூசாமல் பரிபூரண விடுதலை கேட்பது மிகுந்த வியப்புக்கிடமாகிறது.

—ஸர். ரவீந்திரநாத் தாகூர்.

# தமிழ் மொழியின் உயர்வு.



நாம் பச்சிளங் குழவிகளாயிருக்கும் பொழுது மழலைச் சொற்கள் நவின்று நம் பெற்றோர்களை மகிழ்விக்கச் செய்த மொழியும், நம் தமிழ் நாட்டில் பேசும் பேச்சிலும், நினைக்கும் நினைவிலும், பாடும் பாட்டிலும், ஊட்டும் உணவிலும், காதலர் சந்திப்பிலும், ஆளைக் கொல்லும் சண்டையிலும், ஆகாய மெங்கணும் நிறைந்து நிற்கும் மொழியும் எம்மொழி? தமிழ் மொழியே!

உலகில் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும் நாட்டுப்பற்று, கலை, மொழி முதலியவைகளில் ஆர்வமிருத்தல் வேண்டும். தமிழ் மொழியில் எண்ணிறந்த நூல்கள் உள்ளன. சமரசம் ததும்பும் நூற்களும், காவிய வனப்புடன்காட்சி யளிக்கும் நூற்களும் எண்ணிறந்தன! இளங்கோவடிகள் செய்த 'தேன்' சிலப்பதிகாரமும், கம்பன் தொகுத்த 'பாற்கடல்' இராமாயண முதலிய நூல்களும், இராமலிங்க சுவாமிகள் இயற்றிய 'பழரசம்' திருவருட்பாவும், இன்றும் இணையில்லாது இறுமாந்து நிற்கின்றனவே! திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் எக்குற்றது? ஒவ்வொரு தமிழன் வீட்டிலும் இருக்கின்றதே! திருக்குறளின் மேன்மையை யறிந்த ஆங்கிலேயரும், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பிரதியைப் பாராட்டவில்லையா?

தமிழ்த்தாய் இன்று நேற்றுப்பிறந்தவளல்ல. அன்னவள் காலம் வரையறுக்கப்படவில்லை. பண்டைத்தமிழ் நூற்களின் மூலம், கிறிஸ்துநாதர் பிறப்பதற்கு 10000 வருடங்களுக்கு முன்பே தோன்றியவளாம் தமிழ்த்தாய். ஆகையால், இன்றைக்கு சுமார் 12000 வருடங்களாகின்றன.

டாக்டர் வின்ஸ்லோ என்னும் மேனாட்டுப் பாதிரியார் ஒருவர் ' எகிப்திய மன்னன் சாலமன் காலத்தில், தட்சிணத்தில் வந்து போன கப்பல் வியாபார எற்றுமதிச்சரக்குகளின் பெயர்களாகிய தந்தம், கபி, தோகை என்பவைகளை இங்கிருந்து கொண்டுபோய் இன்றும் வழங்கிவருவதே தமிழ் மொழியின் தொன்மைக்குப் போதிய சான்றாகும் " என்று உறுதிகூறுகின்றார். ஆதலினால்தமிழ்த்தாய் மிகமிகப் பழையவளா மென்பதைத் தவிர, என்று பிறந்தவள் என்று நிச்சயமாய்க் கூற இயலாது. பண்டைநாளில் தமிழ் இருந்த நிலையையும், தற்கால நிலையையும் மலைக்கும் அணுவுக்குமே ஒப்பிடமுடியும். நமக்கும் ஒருகாலம் வரும். காலம் நம்மிடம் வாராது. நாம் அதனிடம் செல்லல்வேண்டும்.

நாம் தமிழ்நாட்டிற் பிறந்தோம். நாம் தமிழன் என்பதற்காகக் கர்வமடைவோம். நாம் செய்யும் வேலைகளிலும், பாடும் பாட்டுகளிலும், பேசும் பேச்சுகளிலும், மற்றும் எக்காரியங்களிலும் தமிழ்த் தாயைப் போற்றி, வளர்ப்போம். தமிழ்த்தாய் வாழ்க.

க. கணேசன்.

---

பல ஸமயங்களில் மனிதருடைய முன்யோசனைகளையெல்லாம் கவிழ்த்து முடிவு திடீரென்று வந்துவிடுகிறது.

# ஜாதி மரபுச் சட்டம்.



"ஜாதித் தலைவராயுள்ள என் வார்த்தையை நீர் மீறக்கூடாது. உமது புத்திரிக்கு மறுமணம் செய்ய நீர் சாஸ்திர ஆதரவுகளை யெல்லாம் எடுத்துக் காட்டினீர். அது சரிதான். ஆனால், வழக்கத்திலில்லையே யென்பது ஒன்றுதான் ஆக்ஷேபனை. ஆகிலும், நீர் துணிந்து உமது குமார்த்திக்கு மறுமணம் செய்ய எத்தனப்படுவீராகில். நம்முடைய மரபைச் சேர்ந்த ஜனங்கள் யாரும் வரமாட்டார்கள். மேலும், உம்மைச் சாதியிலிருந்து நீக்கி "பெலி" போட்டு விடுவார்கள். இதை யெல்லாம் செவ்வையாய் ஆலோசித்து நடக்க வேண்டும். இதல்லாமல். மரபுச்சட்டத்தைக் கடந்து நடப்பீராகில், அந்த சட்டத்திற் கண்ட தண்டனைக்கு நீர் உட்பட வேண்டியவராய் நேரிடும். அந்த சட்டத்தை உமக்குப் படித்துக் காண்பிக்கிறேன், கேளும்.

மரபுச்சட்டம்.

(சில பாகங்கள் இவ்விடத்தில் விடுகை செய்யப்பட்டன.)

"இந்தப்படி நாம் அனைவரும் ஒருமித்து எழுதிக்கொண்ட சட்டம்; இந்த உடந்தைக்கு யாதா மொருவன் அத்து தப்பி நடந்தால், அவன் வீட்டு தட்டு முட்டு, ஆஸ்தி யாவற்றையும் கரிகிருஷ்ணஸ்வாமிக்கு கொடுத்து விட்டு அவனையும் சாதிக்குக் குற்றவாளி யாக்கிப்போடுகிறது. இந்தாப்படிக்கு அனைவரும் ஒருமித்து எழுதிக்கொண்ட சட்டம்."

"அப்படி யாதாமொருவன் இந்தக் கட்டுத்திட்டத்துக்கு அத்து தப்பி பெண் கொடுக்க இசைந்தாலும், பெண்கொள்ள இசைந்தாலும், அதற்குச் சாந்தி நடந்தாலும். நம்முடைய உறவின் முறை பாவனையாக அவனுடைய சுபாசுபங்களுக்கு அனுகூலித்து நடந்து கொண்டாலும், அவன் நமது மரபுக்கு ஈனப்பட்டு, அக்ஷணமே அவன் காணியாட்சி மிராசுக்கு யோக்கியதை கெட்டு. அவன் வீட்டையும் இடித்து நிரவி விட்டு, பரதேசப் பிரவேசமாய்த் துரத்தி விடக்கடவோம். இப்படிக்கு அனைவரும் சம்மதித்து எழுதிக்கொண்ட ஒருமைச் சட்டம்."

"பெலி"யின் விவரம்.

"பரிசாரகர்கள் நவபாண்டத்தில் ஜலம் பூர்ணம் பண்ணி மேற்படி பரிசாரகர்கள் எடுத்துக் கொண்டு. ஒற்றைத்தாரை யூதிக் கொண்டுபோய் இவர்கள் வீட்டு வாயிற்படிகளில் உடைத்துப் போட்டு. ஆற்றிலே ஸ்நானம் பண்ணி வரும்படிக்கு ஆக்யாபித்தோம்."

விவேகசிகாமணியே ஜாதி மரபுச் சட்டம் எவ்வளவு கண்டிப்பாயிருக்கிறது பார்த்தீரா? ஜாக்கிரதைப்பட்டு நடவும்.

ஃ

விவேகசிகாமணி:—தாங்கள் எனக்குப் படித்துக் காட்டப்பட்ட

---

ஸ்வயகாரிய துரந்தரரான கபடிகளாலே நற்குடும்பங்களில் பரப்பப்படுகிற விஷமமான பொய்களும், கோள்களும் கொஞ்சமா?

சட்டமானது கேள்வியற்ற, ஒழுங்கற்ற பழய காலத்து நவாபு தர்பார் துரைத்தனத்தில் அல்லது, இங்கிலீஷ் துரைத்தனம் நல்ல சீர்திருத்தத்திற்கு வந்திருந்திராத காலத்தில், அல்லது ஜனங்கள் சுத்த மூடத்தனத்தில் அழுந்தி விவேக ஞானம், சுதந்திரம் எவ்வளவும் விளங்காதிருந்த காலத்தில் நிறைவேறி வந்திருக்கலாமென்று நினைக்கிறேன். இப்போது அதைக் கனவு காண்கிறதற்குமில்லை. நீர் இவ்விதம் எவரையாவது அவமானப் படுத்தினுல் உடனே கோர்ட்டில் உம்மீது மான நஷ்டத்துக்கு வழக்கு தொடர்ந்து உமக்கு அபராதமாவது சிறை வாசமாவது கிடைக்க வைத்து அவமானப் படுத்தி விடுவார்கள். ஹிந்து விதவைகளுக்கு மறுமணம் செல்லத்தக்கதென்று 1856 ம் வருஷத்து 15-வது ஆக்ட்டு பிறந்திருக்கிறது. எவ்வளவோ விவாகம் நடந்து மிருக்கிறது. நீர் பூச்சாண்டி காட்டுவது பயன் படாது.

ஜாதித்தலைவர் :—நமது ஜாதியில் மறுமணம் அபூர்வ மென்பதற்கு நம் முன்னோர்களின் வழக்க ஸம்பிரதாயத்தை உமக்கு எடுத்துக் காண்பித்தேனே யன்றி வேறில்லை. மற்றபடி இப்போதுள்ள சட்டங்களை நான் கொஞ்சம் அறிந்து வைத்தவன்தான்.

விவேகசிகாமணி :—பழய காலத்தின் சில சங்கதிகளை இப்பொழுது நினைத்தால் வெகு விநோதமாயிருக்கிறது. பிராமண ஸ்திரீக்கும் சூத்திரனுக்கும் பிறந்தவர்களே தீண்டாதார் ஆவர் என்று மனுதர்ம சாஸ்திரம் கூறி, அவர்களை ஊருக்கு வெளியில் விலக்கிக் கோயிலுக்குள்ளும் புகக்கூடாதபடி செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இப்போது ஒரு பிராமணஸ்திரீக்கும் சூத்திரனுக்கும் விபசாரத்தால் சந்ததி யுண்டானுல், அவர்களை ஊருக்கு வெளியே யார் விலக்கி வைக்கிறார்கள்? அவர்களைக் கோயிலுக்குப் போகக் கூடாதென்று யார் தடுக்கிறார்கள்? அவர்கள்தான் அதிக பணக்காரர்களாய் மோட்டார் சவாரியில் போகிறார்கள். அவர்களைத் தீண்டாதாரென்று எவரும் சொல்வது கிடையாது. இந்தப் "பிராமண—சூந்திர புதிய சந்ததிகள்" கோயிலுக்குள் நுழையலாம். "பழய பிராமண சூந்திர சந்ததிகள்" மட்டும் கோயிலுக்குள் பிரவேசிக்கக்கூடாதா?

ஜாதித்தலைவர் :—இந்த விஷயம் பிராமண பண்டிதர்களால் தீர்க்கப் படவேண்டிய பெரிய சங்கதி. உன் பிரியம்போல் செய்துகொள். நான் குறுக்கே வரவில்லை.

விவேகசிகாமணி :—நீர் நல்லது செய்யவேண்டாம். கெட்டது மட்டும் செய்யாதிருந்தால் அதுவே போதும். போய் வாருங்கள்.



---

வீட்டுக்கு உழைக்கிறவனை எத்தனை காலம் வரையில் பிறரிடம் தூற்றுகிறார்களோ, அத்தனைகாலம்வரை அக்குடும்பத்தின் முழுமைக்குமே கேவலம் தான் ஏற்படும். உழைப்புக்காரனின்மீது வந்த பழிகள் தானுக நீங்கிவிடும்படிக் காலமானது செய்துவிடும். ஊராரும் அவனது பரிசுத்தத்தை உணர்ந்துவிடுவார்கள்.

---

நீங்கள் பூஜை மணியை ஆட்டிக்கொண்டும், கற்பூரத்தைக் கொளுத்திக் கும்பிட்டுக்கொண்டும், சாஸ்திரங்களைப் பார்த்துக்கொண்டும் இருங்கள். மற்றபடி தேசம் எவ்வாறு கெட்டுப்போனுலும் நீங்கள் அக்கரைப்படத் தேவையில்லை உங்கள் பூஜையும் சாஸ்திரங்களுமே உங்கட்குப் பெரிய ஸ்வராஜ்யம் வந்ததுபோலாம். என்று வைதிகம் கூறுகிறது.

# பிரபஞ்சதரிசனம்

## ஸம்ஸ்கிருதக் காவ்யங்கள்.



ஸம்ஸ்கிருதக் காவ்யங்கள் முதல் முதலாக எழாம் நூற்றாண்டின் முதற் பாதியினின்றே ஆரம்பமாகிறது என ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகின்றார்கள். கி. பி. 606—648-ல் “ கானோஜ் ” நகரத்தில் வசித்து வட இந்தியா முழுவதையும் திறமையுடன் ஆண்டு வந்த ஹர்ஷவர்த்தனரால் ஆதரிக்கப்பட்டு வந்த பாணன் “ ஹர்ஷ சரிதை ” என்ற காவ்யத்தை எழுதி முடித்தார். காளிதாஸன், ஸுபந்து, பாரவி, குணத்யா, முதலிய கவிகளைப்பற்றிய உண்மைச் சரித்ரம் நமக்கு எட்டாத போதிலும் அவர்களுடைய கீர்த்தி எழாவது நூற்றாண்டின் முதற் பாதியிலேயே புகழப்பட்டு வந்தது என்பதற்கு அத்தாட்சியாக பாணனுடைய கவிகளினின்றும், கி. பி. 634-ம் ஆண்டில் வரையப்பட்டுள்ள சிலாசாஸனங்களினின்றும் விளங்குகின்றது. “ மகா காவ்யம் ” என்று சொல்லக்கூடிய “ புத்த சரிதை ” சீனர்களால் அவர்களுடைய பாஷையில் கி. பி. 421-ம் வருஷத்திற்கு இரண்டொரு வருடங்கள் முன்னர் மொழி பெயர்க்கப் பட்டிருப்பதாய்த் தெரிகிறது.

ஃ

காளிதாஸரால் எழுதப்பட்டுள்ள நான்கு காவ்யங்களில் மிக்க நேர்த்தியானது “ரகுவம்ச”மே. திலீபராஜனிலிருந்து ஆரம்பித்து ஒன்பது அத்யாயங்கள் அவருடைய வம்சத்து அரசர்களைப்பற்றி விவரமாகக் கூறி, பின் ஆறு அத்யாங்களால் “முதற் கவியால்” (வால்மீகியால்) எழுதப்பட்ட ராமாயணத்தையும் வரைகின்றார். அவருடைய இரண்டாவது காவ்யம் முருகக் கடவுளின் திருஅவதாரத்தைப்பற்றி பாடப்பட்ட “ குமார சம்பவம் ” என்பதேயாம். இப்பொழுது குமாரஸம்பவம் 17 அத்தியாயங்கள் அடங்கியதாக இருப்பினும் முதல் ஒன்பது அத்யாயங்களே காளிதாஸரால் எழுதப் பட்டது என்றும், பின் எட்டு அத்யாயங்கள் பின் சேர்க்கப்பட்டதென்றும் பலருடைய அபிப்ராயம். ஸ்ருங்கார ரஸத்தையும் சோகரஸத்தையும் ஒருங்கே எடுத்துக் காண்பிப்பது “ மேகதூதம் ” என்னும் காவ்யமே. உதாரணமாக, தன் காதலியைப் பிரிந்த கந்தர்வன் கதறுகின்றான். “அந்தோ! காட்டிலுள்ள கொடிகளைக் காணும்போதெல்லாம் பூங்கொடி போலுள்ள உன் பிம்பம் என்முன் நிற்பதுபோல் தோன்

---

கீழ்க்குணங்களின் தீப்பொறிகள் பறக்கின்ற இடத்தில் எத்துணைச் செல்வம் கூடியிருப்பினும் நியாய புத்தியும் இரக்க சிந்தையும் தோன்றாது.

றகின்றதே! மிரண்ட மான்களின் கண்ணைப் பார்த்தால் உன்னைக் காண்பது போலன்றோ விருக்கிறது. ஏ, மான் கண்ணி! சந்திரனை நோக்கினால் நீ உயரத்தினின்று என்னை நோக்குவது போலிருக்கிறது. மயிலின் தோகையைக் காண்பின் உன் அழகிய கூந்தலைப் பார்ப்பது போலிருக்கிறது. ஜலத்தில் உண்டாகும் சிறிய அலைகளைக் காணும் போதெல்லாம் விளையாட்டாக நீ முகத்தை சுளுக்குவது போலிருக்கிறது. ஐயோ! நீ எங்கும் நிறைந்த என்னை ஆவலுடன் நோக்குவது போல் தோன்றினும் ஒரு இடத்திலும் உன்னை என் கரங்களால் அணைத்துகொள்ள இயலவில்லையே தெய்வமே" என்கிறான். அவருடைய நான்காவது காவ்யம், "ருது ஸம்ஹாரம்" என்னும் ஆறு வர்ஷாகாலங்களையும் அழகாய் வர்ணிக்கும் காவ்யமாகும்.

இரண்டாவதாக, காவ்யம், தத்வம் இவையிரண்டும் உயிருடன் வந்தாற்போல் விளங்கும் "பர்த்ருஹரியின்" காவ்யங்களைக் கவனிப்போம். காதல் என்பதை விவரித்துக் காட்டும் அவருடைய "ஸ்ருங்கார சதகம் என்னும் காவ்யம் மிக்க கீர்த்திபெற்றது. காதலர்களின் பிரிவினால் உண்டாகும் அவஸ்தைகளை நேரில் அனுபவித்தவர்போல் வரைகிறார். ஓர் இடத்தில் கூறுகிறார். "விளக்கினருகில் இருப்பினும், சுடர் விட்டு எரியும் நெருப்பினருகில் இருப்பினும், சந்திர சூரிய நக்ஷத்திரங்களின் ஒளியிலிருப்பினும் மிக்க பிரகாசமான என் காதலியின்கண்முன் இல்லாது போயின் நான் காரிருளில் உழன்று கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது." மற்றொரு இடத்தில் மன்மதனை மீன் பிடிப்போனாகவும், உலகமாகிற சமுத்திரத்தில் பெண்ணாகிற கருவியால் மனிதனாகிற மீனைப்பிடித்து நெருப்பாகிற காமத்தில் வாட்டி சமைக்கிறான் என்கிறார்.

"ஸ்ருங்கார திலகம்" என்ற மற்றோர் காவ்யத்தில் "மாதர்கள் வேடர்களாயும், அவர்களுடைய அழகிய புருவங்கள் வில்லாகவும், மிரண்ட பார்வை அம்பாகவும், அவைகளால் வேட்டையாடப்படும் மான் மனிதர் என்பதாகவுமிருக்கிறது என்றுகூறுகிறார்." இக்காவ்யம் காளி தாஸரால் வரையப்பட்டது என்று சிலர் அபிப்ராயப்படினும், இது அவரால் எழுதப்படவில்லை என்பதற்குப் பல அத்தாட்சிகள் காணப்படுகின்றன. இதையொத்த "அமரு சதகம்" என்னும் மற்றோர் காவ்யம் காதலர்களின் மனோபாவத்தையும், அவர்கள் அன்பு, கோபம், கவலை, ஆநந்தம் யாவற்றையும் அழகாகக் கூறுகிறது. ஆயினும் இக்காவ்யம் உண்மையான காதலைவிட காமத்தையே அதிகமாகக் கூறுகிறது.

"கிருதார்ஜுனீயம்" என்றகாவ்யம் "பாரவி" யால் மஹாபாரதம் வனபர்வத்தில் கூறப்பட்டிருக்கும் சிவனுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த ஸம்வாதத்தையும் சண்டையையும் விஸ்தரிக்கிறது. பரமசிவனைக்குறித்து அர்ஜுனன் பாசுபதாஸ்திரத்தைப் பெற தபம் செய்ததாயும், சிவன் வேடனைப் போல் வேஷம்பூண்டு வரவும் இருவருக்கும் யுத்தம் நடந்து அர்ஜுனன் தோல்வி யுறவும், அதன்பின் சிவன் அர்ஜுனன் விரும்பிய அஸ்திரத்தைக் கொடுத்ததாயும் கூறுகிறது. "வீரம்" "அஞ்சா நெஞ்சுபடைத்த க்ஷத்ரியர்களின் ஆண்மை" இவற்றை அழகாகக் கூறுகிறது. ஆயினும், அவருடைய பாடல்கள் ஒவ்வொன்றும் மூன்று நான்கு அர்த்தங்களைக் கொடுக்கக் கூடியதாகவிருப்பதால் அவருடைய கல்வித்திறமையை அது நன்கு விளக்கிக் காட்டுகிறது.

"பட்டி" யால் எழுதப்பட்ட "பட்டி காவ்யம்" இருபத்திரண்டு

அத்தியாயங்களில் ராமாயணத்தை வரைந்து அதினால் ஸம்ஸ்க்ரத இலக்கணத்திலுள்ள நுட்பமான விஷயங்களைப் போதிக்கிறார். அவருடைய பிறந்த வருஷம் நமக்கு எட்டாவிடினும் அவர் ஏழாவது நூற்றாண்டின் மத்தியில் தான் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

"ஜானகீஹரணம்" என்று குமாரதாஸரால் செய்யப்பட்ட காவியம் காளிதாஸரின் "ரகுவம்சத்திற்கு" இணையென ராஜசேகரர்(கி. பி. 900) என்னும் கவி கூறினாலும் ரகுவம்சத்திற்கு இணையாகாது என்பதே பலருடைய தீர்மானம். 25-அத்தியாயங்களில்எழுதப்பட்ட "ஜானகீ ஹரணம்" என்னும் காவ்யத்தில் பதினன்கு அத்தியாயங்களே நமக்குக் கிடைத்திருக்கிறது. இக்கவியின் முக்கிய எண்ணம் அயோத்தி, ஜலக்ரீடை, காதலர்களின் மனோபாவம், சூர்யோதயம், அஸ்தமனம், வர்ஷாகாலங்கள், முதலியவைகளை வர்ணிக்கவே இதை எழுதியுள்ளார் எனத்தெரிகிறது.

"மாக"னல் எழுதப்பட்ட "சிசுபாலவதம்" என்னும் காவ்யம் இருபது அத்தியாயங்களுள்ளது. இது பத்தாம் நூற்றாண்டின் முடிவில் எழுதப்பட்டது. இக்காவ்யத்தில் பாடல்களின் முக்கியமான ரஸங்களும், புதிய நூதன சக்தியும் காணப்படவில்லையென்று பலர் எண்ணுகிறார்கள். ஆயினும், நுட்பமான இலக்கண விஷயங்களை எடுத்துக் காட்டும் வழியில் இது மிக்கமேன்மையானதே என்பதில் சந்தேகமில்லை.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவில் ஆண்டு வந்த ஹர்ஷசக்கிரவர்த்தியால் எழுதப்பட்ட "நைஷதசரிதை"என்னும் நளனின் சரித்திரம் மிகவும் போற்றத்தக்கது.

இக்காவ்யங்களுள், "ரகுவம்சம், குமாரசம்பவம், க்ருதார்ஜுனீயம், சிசுபாலவதம், நைஷதசரிதை, பட்டிகாவ்யம்," என்று ஆறு காவ்யங்களுமே, "காவ்யாதர்ச" (காவ்யங்களின் கண்ணாடி) என்னும் புஸ்தகத்தில், "ஆறு காவ்யங்களும் உலகில் சிறந்த காவ்யங்களுள் மேலானவை," என்று எழுதியிருக்கிறார் தண்டின் என்ற கவி. இதுவே மல்லிநாதரின் அபிப்ராயமும். இவைகளுள் மிக்க மேன்மையானது காளிதாஸரின் ரகுவம்சமே.

K. V. S. வாஸ்.

## மேற்கின் நாகரீகம்!

ஆளுக்கும் அரசுக்கும் போராட்டம்! தொழிலாளிக்கும் முதலாளிக்கும் சண்டை! ஆணுக்கும் பெண்ணுக்கும் யுத்தம்! லௌகிக லாபத்துக்கும் ஆத்ம லாபத்துக்கும் யுத்தம்! ஜாதிகளின் கூட்டஹங்காரத்துக்கும், மாநுஷிக பரம தர்மங்களுக்கும் யுத்தம்! அங்ஙனமே, வர்த்தகம்—அரசு எனுமிவற்றின் பிரமாண்டமான கூட்டங்களிலே ஸஹஜமாக விளையக்கூடிய குரூரமான சிக்கல்களுக்கும், அழகையும், பரிபூரண சாந்தியையும் விரும்புகிற மனுஷ்ய ஸ்வபாவத்திற்கும் யுத்தம்! இதுவே இக்காலத்து மேற்கின் நாகரீகம்!

# என் தாய்

1. பத்துத் திங்கள் வயிற்றினில் வைத்து பரிந்து காத்தவர் யார்
தத்திஇந்த தாணியில் வந்ததும் தாவியணைந்தவர் யார்
கத்திக்கதறி கண்ணீர் விட்டால் கட்டியணைந்தவர் யார்
அத்தகு தாயிடுங் கட்டளை சென்னியா லாற்றினுனேழு கேனே?

2. சித்தமகிழ்ந்து முத்த மளித்துச் சிரித்து நின்றவர் யார்
பத்தரை மாற்று தங்கமேனவேனை பரிந்து வளர்த்தவர் யார்
சித்தமதனிற் சலிப்பது வின்றிச் சிசுருஷை செய்தவர் யார்
அத்தகுதாயின் அடிமலர் தம்மை யன்பாய்த் தோழுகேனே?

3. ஈயு மேறும்பு மேன்னுடல் மொய்க்காதிருந்து பார்த்தவர் யார்
நோயும் நொடியும் வாராதேனக்கு நோன்பு நூற்றவர் யார்
சாயுஞ் சமயம் வந்து தன்மேல் சாற்றிக்கோண்டவர் யார்
ஆயு மன்னையினடி மலர் தம்மை யன்பாய்த் தோழுகேனே?

4. நாயும் பூனையுங் காட்டியேனக்கு நல் லமுதீந்தவர் யார்
பாயும் படுக்கையு மேன்னுடன் கோண்டு பாலமுதீந்தவர் யார்
காயுங் கனியுங் களிப்புடனளித்துக் கண்டு மகிழ்ந்தவர் யார்
சேயும் நானும் அன்னவர் பாதஞ் சிந்தையாற் றேழுகேனே?

5. நானே யடைந்த போதுளம் வருந்தி நடக்கங்கோண்டவர் யார்
தேனே பாலோ வேனவேனைப் போற்றித்தேற்றி நின்றவர் யார்
வானே ரேத்தும் வள்ளலையேனக்கு வகுத்துச்சோன்னவர் யார்
மானேன் புள்ள மாதாவை யேன்றும் மறவாமற் றேழுகேனே?

6. தான் மருந்துண்டு பத்தியங்கோண்டு தன்னல மிழந்தவர் யார்
நான் அழும்போழுது நயமிகக்கோண்டு நல்லமுதீந்தவர் யார்
கோன் எனக்காக குருவுமதாகக் குணமுட னின்றவர் யார்
ஆன்றோரான வன்னையின் பாதம் அனுதினந் தோழுகேனே?

7. ஆடை யணிகள் எனக்குப்பூட்டி யகங் களித்தவர் யார்
வாடைக்காற்று வாட்டாம லேன்னை வருந்தி வளர்த்தவர் யார்
ஆடைத்தயிரும் அமுதமு மூட்டி அன்பாய் வளர்த்தவர் யார்
பீடை யோழிக்கு மன்னையின் பாதம் போற்றித் தோழுகேனே?

8. கூட விருந்து கோஞ்சிக்கோஞ்சிக் குதலைக் கேட்டவர் யார்
வாட வேன்னை விடாமலேன்றும் வருந்திக் காத்தவர் யார்
ஆட வேன்னை விட்டுப்பார்த்து ஆனந்தங் கோண்டவர் யார்
பாடமோதின வன்னையின் பாதம் பக்தியாய்த் தோழுகேனே?

9. பாலும் பழமுந்தேனும் நேய்யும் பரிந்து தந்தவர் யார்
கோலும் பிரம்புங்கோண்டு வேன்றன் குற்றங் கடிந்தவர் யார்
சாலும் என்று பயந்த வேன்னை சடுதியிலணைத்தவர் யார்
மேலும் அன்பு கோண்ட வன்னையை மேச்சித் தோழுகேனே?

ப. கலியாண சுந்தரம் பி. ஏ.




ஜெயசங்கரன்:—

[ஓர் துப்பு அறியும் இனிய தமிழ் நாவல், ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்க ராஜு அவர்கள் இயற்றியது. டிம்மி 1 X 8 அளவில் 374-பக்கங்கள் கொண்ட கிளேஸ் காகிதப் பதிப்பு. விலை ரூபா 1-8-0]

1925-ம் வருஷ முதற்கொண்டு சென்ற எழு ஆண்டுகளாக யாவரானும் எதிர்பார்த்து நின்ற "ஜெயரங்கன்" எனும் நவீனகத்தை அன்புடனும் வரவேற்கின்றோம். இவ்வளவு காலதாமதமாக வெளிவந்ததின் காரணங்களை விளக்கி "பிரஜாநுகூலன்" ஆசிரியர் "ஒரு சிறு குறிப்பு" என்று இரண்டு பக்கங்கள் நிறைய எழுதியிருக்கின்றார். 1933-ம் வருஷ முதலில் வெளிவந்த நாவல்களில் முதலாவதாக "ஜெயரங்கனை"ச் சொல்லலாம். ஸ்ரீமான் ரங்கராஜுகாரு எழுதிய நாவல்கள் யாவற்றினும் இதனை மிக்க விசேஷித்துக்கூறும் வண்ணமாக அபாரமான கற்பனைகளுடனும், திடுக்கிடும் ஸம்பவங்களுடனும் அமைந்து வாசிப்பவர்கள் பரவசப்பட்டுப் போகும்படி செய்கிறது. ஒரு முறைக்கு இருமுறை படிக்குமாறு கதாநயம் அத்தனை சூட்சிகளுடனும் ஆக்கப்பெற்றுள்ளது. ஆசிரியர் தமது வழக்கப்படியே மிகச் சுருக்கமாகவே, முற்றிலும் கதையாகவே 370-பக்கங்கள் வரை எழுதிச் சென்றுள்ளார். இடையிடையே ஆங்காங்கு குறிப்பிட்டுள்ள அநுபவங்களும், நற்போதனைகளும், உதாரண முகந்தாற் காட்டியுள்ள விஷயங்களும் சகலரும் வாசித்து அறிவு தெளிவடையக் கூடியவையாகும். இயற்கையில் நடந்த வண்ணமாகவே இந்த நாவல் கற்பனை செய்யப்பட்டுள்ளது. ஆசிரியரின் அபாரமான கற்பனைத்திறம் பெரிதும் பாராட்டற்குரியது.

இந்நாவலின் ஆரம்பத்தில் தோன்றுகிற காந்திமதியாப்பிள்ளை பிராமணர்களிடத்துள்ள இயற்கையான காந்தியை மதியாத பிள்ளையாகி முற்றிலும் பார்ப்பனத் துவேஷியாய் விஷச்சொற்களைக் கக்குகின்றார். அதனின்றும் நேரும் கேடுபாடுகளே இந்த நாவலின் விஸ்தாரத்திற்குச் சூத்திரக்கயிறாகும். காந்திமதியாப் பிள்ளையின் பிராமண துவேஷம் பின்னுக்கு எண்ணற்ற தவறுதல்களில் சிக்க வைத்து கடைசியில் பாதாளக் குழியில் தள்ளுகின்றது. இந்நாவலின் முக்கிய புருஷரான ஸ்ரீநிவாசராஜுவின் உத்தமகுணங்களும் தயாளசிந்தையும் கம்பீரமும் பெருந்தன்மையும் பழங்காலத்திய நமது பெரியோர்களின் பிரபாவத்தை நினைப்பூட்டுகின்றது. கலெக்டரின் பங்களாவில் நடக்கும் களவுகளும், கலெக்டரே பிரதிவாதிகளின் ஊர்வலத்தில் தாம்

---

காலையுங் கையையுங் கண்ணிலோற்றி கட்டி யணைத்தவர் யார்
சோலையுங் காவுந் தூக்கிச்சென்று சுகமாய் வளர்த்தவர் யார்
தோலைப்பற்றின விரத்தம் போன்ற தொடர்பு கொண்டவர் யார்
மாலையுங் காலையு மாதாவின் பாதம் மறவாமற் றேழுகேனே?

ப. கலியாணசுந்தரம், பி. ஏ.

பூஸம் பெற்றுக்கொள்ள நேர்தலும், சீதாராம சாஸ்திரிக்கு எவருமே உதவாமற்போகும் விசித்திரங்களும், இன்ஸ்பெக்டர் காமாக்ஷிராவின் மீது ஏற்படும் பழிகளும், தாசி செல்லத்தின் விபரீதங்களும், ஸ்ரீநிவாசராஜுவின் அதிசய மரணமும், ஆபரணம் காணுதுபோகும் ஸம்பவங்களும் இன்னும் இவைபோன்றன பலவும் மகாஆச்சரியகரமானவை. காந்திமதியாப் பிள்ளையால் கெடுகின்ற சுந்தரராஜு பிறகு கொண்டாடத்தகுந்த குணங்களுடன் பிரகாசித்தல் போற்றற்பாலது. கதா நாயகியான ஜெயலக்ஷ்மியும், கதா நாயகனுன பாலரங்கனும் வாசகர்களின் மனத்தை வசிகரிக்கச்செய்கின்றனர். அன்னோரின் இனிய குணங்கள் கொண்டாடத்தக்கவை. உத்தம புருஷராகிய டிப்டி மாஜிஸ்திரேட்டை எவ்வளவு உயர்த்திக் கௌரவிப்பினும் தகும். கொலம்பு துப்பறிவோர்களின் சாமர்த்தியமும், அதற்கு மேலாகக் கோவிந்தனின் துப்பறியும் சூழ்ச்சிகளும் அபாரமானவை. ஆங்கிலேய பாங்கிகளின் போக்கும், இந்தியர்களது பாங்கிகளால் உண்டாகும் நன்மையும் விளக்கி வியாபார நிபுணத்துவத்துடன் காட்டியுள்ள குறிப்புகள் மிகவும் ஊன்றி வாசிக்கத்தக்கவைகளாகும். இந்நாவலில் தோன்றும் சந்தேகங்களையும், மறைந்துள்ள மர்மங்களையும், கதா ரகசிய பாகங்களையும் எத்துணை ஆராய்ச்சி செய்யினும் ஒரு சிறிதுங்கூட விளங்காதவைகளாகி, பிறகு ஆசிரியரே எடுத்து விவரிக்கும் போதுதான் தெரிந்துகொள்ளக் கூடியதாய் அமைத்துள்ள கற்பனு விசேஷம் அதியற்புதகரமானவையாகும். கலெக்டரையும் டிப்டி மாஜிஸ்திரேட்டையும் சுட்டு வீழ்த்த முயலுகையில் அதைத் தடுக்க இருவர் முயன்று துப்பாக்கிப் பிரயோகம் செய்தது மட்டும் தெரிகிறது. ஆனல் சுடப்பட்ட குண்டுகளோ மூன்ருயிருப்பதால் இன்னொருவரும் ஏககாலத்தில் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருப்பதாய்ப் புலனுவதில், அவ்விதம் செய்தவர் யார் என்பது விளங்கவேயில்லை. அந்த விவரமும் ஆசிரியர் தெரிவித்த பிறகே அறிய முடிகிறது. இவ்வாருக, "ஜெயரங்கன்" ஆரம்பமுதல் கடைசிவரையும் மிக்க அற்புதமாய் அமைந்திருப்பதால் தமிழ்ச் செல்வர்கள் அனைவரும் விருப்பத்தோடும் பெற்று வாசிப்பார்களென்பது திண்ணம். இந்நாவலின் ஆசிரியரவர்கள் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்க.

இப்புஸ்தகம் அமிர்த குணபோதினி ஆபீஸில் கிடைக்கும்.

---

ஒருவன் பிரயாணத்துக்குத் தயாராயிருக்கையில் அவன் போய்ச்சேர்ந்து எதிர்பார்க்கவேண்டிய சங்கதிக்கு முற்றிலும் ஏமாற்றமாக ஒரு கடிதம் வருகிறது. இதேது முதல் கோணலாக இருக்கிறதே யென்று பிரயாணத்தை நிறுத்திவிடுகிருன். மற்ருெரிடத்திருந்து வந்த கடிதமும் அவன் விருப்பத்தில் மண் விழுந்ததுபோன்ற செய்தியே காட்டுகின்றது. இரண்டு வாரங்கட்குப் பின் மறுபடி துணிந்து புறப்படுகையில் அவன் மகிழத்தக்க கடிதங்கள் வருகின்றன. அவனும் பூரிப்புடன் புறப்படுகிருன். இது காலம் செய்யும் கோலம் போலும்!

---

தன் வீட்டில் ஒரு வேளை அன்னத்துக்கு வந்தவர்களை வாய் ஓயாமற் பேசிக் குற்றஞ்சாட்டுவதில், வந்தவர்களோ இனி இவன் சோறும் வேண்டாம், பேச்சு கேட்கவும் வேண்டாம் என்று தூர ஒதுங்கி விடுகின்றனர்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# பழசு பித்தளை! புதிசு தங்கம்!!



என் விகட உலகப்போக்கு பழயதை விட்டுப் புதியதைத் தாவுவதில்தான் அதிகமாகக் குதித்துக்கொண்டு நிற்கிறது? பழய 1932-ம் வருஷத்தைப் பித்தளை என்று ஒதுக்கித்தள்ளி, புதிய 1933-ம் வருஷத்தைத் தங்கம் என நினைத்து வாயூறி எதிர் பார்த்திருந்தவர்களுக்குக் கணக்குண்டா? ஓ! புது வருஷம் பிறந்து விட்டது என்று ஆநந்தக்கூத்தாடினவர்களும் எவ்வளவோ பேர்! எதுவும் பழகிய பிறகே தெரிகிறது! கொண்ட பெண்ணின் குணம் பின்னுக்குத்தான் விளங்குகிறது! பழய 1932-ம் வருஷத்துடன் கூட்டுறவு செய்து பழகியதில் இன்பமும் சற்றே இருந்திருக்கிறது; துன்பமும் தொடர்ந்து சூழ்ந்திருக்கிறது! புதிய 1933-ம் வருஷம் அப்படியில்லாமல் துன்பக் கோட்டையையே நெருங்காமல் இன்பமாளிகையின் பக்கமாகவே சுற்றி நிற்கு மென்று என் நஞ்சான் குஞ்சான்கள் ஒரு விசேஷ ஆவலாதி கொள்கிருர்கள்! அவ்விதமாக ஒரு புது மதிப்பையும் புதியதுக்குத் தந்து கௌரவப் படுத்துகிருர்கள்! கடைசியில் புதிய வருஷமும் பிறந்து நாட்களும் மாதங்களும் வரிசைக் கிரமமாகச் சென்று கொண்டிருப்பதில், போன வருஷத்தைக் காட்டிலும் இந்தப் புதிய வருஷம் விசேஷித்த இன்ப முள்ளதாக, லாபமுள்ளதாக, விருத்தியுள்ளதாக இருக்கவேண்டுமென்று மனது நினைத்துக்கொண்டு பெரிய பெரிய ஆவல்களில் தாவி நிற்கின்றது. இடையே சில துன்பங்களும் சோதனைகளும் எதிர்ப்பட்டாலும்; பின்னுக்குப் பெரிய அதிர்ஷ்டம் எவ்விதமும் இப்புதிய வருஷத்தில் கிடைக்கு மென்றே மனஸ் பூர்வமாய் நம்புகிருர்கள்! தங்களின் கஷ்டங்களும், பாடுகளும், தரித்திரக் கண்ணீர்களும் விரைவில் தானே தொலைந்தொழிந்து, இப்புது வருஷத்தில் பின்னுக்குத் தாங்கள் சுக நிலையிலிருப்பதற்கான பாக்கியங்களெல்லாம் உண்டாகி விடுமென்றும் எண்ணுகிருர்கள்! பழய 1932—ம் வருஷத்தை இவ்வாருக நம்பி ஏமாற்றம் கண்டதுண்டாலும், புதிய 1933-ம் வருஷம் எவ்விதமும் லாப

---

மனிதன் தனது இழி குணங்களினின்றும் விடுபடுதலே—பெரியோரால் புகழப்படுவதாகிய பெரிய விடுதலை.

கரமான வருஷமாக இருக்குமென்று கடைசி வரையிலும் ஒருவித ஆவலாதியான எதிர்ப்பு இல்லாமலில்லே!

ஃ

என் விகட உலகின் ஆவலாதிகள் இவ்வாருக, இனி தங்கமயமாய் ஜொலிக்கின்ற புது வருடத்தின் போக்கு எவ்வாறிருக்கிறதென்று விகடன் என் அனுபவஞானக் கண்ணுல் நோக்கினுலோ, பழயதுக்கும் புதியதுக்கும் அதிக பேதமில்லே யென்றே தோன்றுகிறது! பழய பித்தலேயான 1932-ம் வருஷத்தில் சில பேர்கள் லாபமடைந்தும், சில பேர்கள் சோதனைக் கண்ணீர்கள் கண்டும் இன்ப துன்பம் தொடர்ச்சியாய் வரப் பெற்றிருப்பது போலவே, புதுசான தங்க வருஷத்திலும் அப்படியே சிலர் லாபம் கண்டும், சிலர் எங்கி வாடியும், பழய காடிக் கஞ்சியை மூடிக் குடித்தும் இவ்விதமே பொழுது எப்போதும் போலவே சென்று கொண்டிருப்பதாகத் தான் தோன்றுகின்றது! ஒரு புது விசேஷமோ, ஒரு புது அதிர்ஷ்டமோ, எதிர்பட்டுப் பொன்னேயும் மணியையும் குவியல் குவியலாகக் குவிக்கும் சங்கதி பின்னுக்குத் திரைக்குள்ளாக மறைந்திருக்கின்றது! அந்தத்திரை இப்புது வருஷத்தில் எந்த மாதம் எந்த தேதியில் விலக்கப்பட்டுப் பொன் புதையலின் அதிர்ஷ்ட தரிசனம் கிடைக்குமோ— அது ஆண்டவனின் கிருபையில் இருக்கிறது! மறைக்கப்படும் திரை ஒரு மாயை போலிருந்து சிலருக்கு அந்த மாயை நீங்கி திரை திறக்கப்பட்டது போலாகி உள்ளே யிருப்பனயாவும் கண்களுக்கு எதிர்ப்பட்டு, அவர்களுக்கும் அவைகள் கிடைத்து ஆநந்தப் படும்படி யிருக்கலாம்! இந்த பாக்கியம் பெறுகிறவர்களுக்குப் புதிய 1933-ம் வருஷம் இன்பக்கனியாய் கற்கண்டுக் கட்டியாகிப் பின்னுக்குப் பல வருஷங்களிலும் இப்புதிய வருஷத்தை நினைத்துப் பூரிக்கும்படியாகவும் ஆகும். எத்தனையோ பேர்கள் தங்களின் வியாபார ஆரம்பவருஷத்தை மறவாமல் தங்களின் வர்த்தக ஸ்தாபனம் இன்ன வருஷத்தில தொடங்கப்பெற்றது என்று கடிதங்களிலும் விளம்பரங்களிலும் குறிப்பிட்டுக் கொள்கிருர்களல்லவா! அவ்விதமாக, இந்தப் புதிய 1933-ம் வருஷமும் சிலருக்கு என்றும் நினைக்கக்கூடிய பாக்கியமுள்ள வருஷமாகலாம். வேறு சிலருக்கு அந்தமாயைத் திரையானது எடுக்கப் படாமலேபோக, அவர்கள் வருஷக் கடைசிநாள் வரையில் எப்போது திரை தூக்கப்படுமோ என்று எதிர் பார்த்துக் கடைசியில் திரை எடுக்கப் படாமலேயே போய் ஏமாற்றம் காணும்படியும் நேரலாம், அவ்விதமாக 1932-ம் வருஷத்தில் ஏமாறியவர்களெல்லாம், இப்புது தங்கமான வருஷத்திலாவது மாயத்திரை விலக்கப்படவேண்டு மென்று கனத்த ஆசைக் கோட்டைகளுடனே எதிர் பார்க்கிருர்கள்! இவர்களுடைய பொழுது நல்ல பொழுதாய் விடிய வேண்டுமென்று விகடன் கடவுளே வேண்டிக்கொள்கிறேன்.

ஃ

"பழசு பித்தளே புதுசு தங்கம்" என்பதிலே, பழய வருஷத்தை நாற்றம் பிடித்த பித்தளேபோல எண்ணி இகழ்ந்து விட்டு, புதுசான 1933-ம்

---

"உலகத்தாரது மனச்சாட்சி என்பது ஒரு கோர்ட்டிற்குச் சமானமானதாகும். அதன் முன்பு நாம் ஆத்மார்த்திக விஷயங்களில் ஒன்றுபட்டவர் என்பதை மெய்ப்பிக்கத் தவறக்கூடாது"—ஸ்ரீ ரவீந்திரநாதர்.

வருஷத்தைத் தங்கம்போல உயர்த்திக்கொண்டு புது புது கோரிக்கைகளுடனே இருப்பதை விகடன் மேலே விவரித்தேன்! இனி இரண்டாவதாகச் சொல்லப்போகிற விகடஞானத்தையும் சற்றே கேளுங்கள்! பழசான பித்தளையையே நன்ருகத் தேய்த்துப் பள பளப்பாக்கி புதுசான தங்கம்போல் மயக்கி இப் புது வருஷத்தை நமக்குக் கொடுத்திருப்பதான ரகசியத்தையும் விகடன் இங்கே குறிப்பிடுகிறேன். முன்பு அவலக்ஷணமாய்க் கிடந்த பெண் இப்பொழுது ஜகன் மோகினியாய்ப் பரம சுந்திரியாய்த் தோன்றுவதின் உள் சங்கதி என்ன? அவள் குளித்து முழுகி சிறந்த ஆடையாபரணாதிகளை யணிந்து கொண்டதில் புது அழகு தோன்றிக்கொண்டது! அவ்வளவே தவிர, பெண் பழய பெண் தான்! அவ்விதமே, 1932-ம் வருஷமும் இப்பொழுது தன்னுேடுகூட அதிகமாக ஒரு எண்ணைச்சேர்த்துக் கொண்டு 1933 ம் வருஷமாக முளைத்திருக்கிறதே தவிர, வேறு எங்கேயோ யிருந்து ஆகாயத்திலிருந்து தொப்பென்று குதித்து விடவில்லை. பழய பித்தளை வருஷமே இப்பொழுது தன்னைப் பள பளப்பாக்கிக் கொண்டு புதுசான தங்கம்போல் மினு மினுக்கியவாறு நம் முன்பு வந்திருக்கிறது! பழசுக்கும் புதிசுக்கும் பேதமென்ன வென்ருல், பழய 1932-ம் வருஷம் தன் பையிலே போட்டுக்கொண்டிருந்த 365-நாட்களான பவுன் நாணயங்களும் செலவழிந்து போகவே. அதற்கு மதிப்பு குறைந்து ஏழையாகிப் பித்தளையாய்க் கேவலப்பட்டு விட்டது! இப்போதைய புது வருஷமான 1933-ம் வருஷமோ தன் பையில் 365-நாட்களாகிய பவுன்களைக் கலகலவென்று நிரம்பவைத்துக் கொண்டிருப்பதிலே இது தங்கம் என்று கொண்டாடப்பட்டு. எல்லோரும் புது ஆவலாதிகளுடனே இதற்கு விசேஷ மதிப்பு கொடுத்து வரவேற்கிருர்கள். அவர்களைப்போலவே விகடனும் என் கோணைத்தடியைத் தூக்கிக்காட்டி வணங்கிப் புது வருஷத்திற்கு வாழ்த்து வந்தனங்கள் சொல்லுகிறேன்!

ஃ

பொதுவாக எந்த வருஷமும் சாதாரணமான வருஷமல்ல. பழய பித்தளையான 1932-ம் வருஷமும் சில பெரிய காரியங்களைத் தனது நாளில் காட்டியிருக்கிறது. மகாத்மா சிறைவாசமும் இன்னும் அது போன்ற ஸம்பவங்களும் நாம் சுலபத்தில் மறக்கக் கூடியதல்ல. தீண்டாதார்க்காகக் காந்தியடிகள் உபவாசமிருந்ததும், தீண்டாதாரின் பிரசினையைத் தீர்த்ததும். ஆலயப் பிரவேசக் கிளர்ச்சியைத் தோற்று வித்ததும் நமது ஞாபகத்தில் என்றைக்கும் இருக்குமல்லவா? எத்தனையோ ஜோஷியர்கள் மகாத்மாவின் விடுதலை இன்ன தேதியில் என்றுகூறி ஏமாறியதும்—நாம் அத்தகைய ஜோதிடர்களின் வார்த்தையில் ஏமாருதிருக்க ஒரு நல்ல எச்சரிக்கை யாகுமன்ருே? இன்னும், நமது குடும்பத்துக்குள் நமக்கே பெருஞ் செலவுகள் வைத்துக்கொண்டு, உள்ளுக்கு விசுவாச

---

பறையர்கள் வந்தவாறு பகர்வது சொல்லக் கேண்மின்,
மறையவர் மங்கைதன்னை மணந்த சூத்திரன் பால்வந்தோர்,
குறைவினரெனவே நீங்கள் கூறுவதேனுே வேது,
திறமுற வதையெமக்குச் செப்புவீர் சாதியாரே.

—சைதாபுரம் காசி விஸ்வநாத முதலியார் 1871-ம் ஞு.

மற்று நின்றவர்களைக்கண்டு கொண்டதும் இந்தப் பித்தளை வருஷத்தில் தான்! விபசார நோக்கத்தோடும் வீட்டைச் சுற்றிச் சுற்றி நின்ற நாய்களை வீட்டுக்கு வரவேண்டாமென்று துரத்தியதும் இந்த வருஷத்தில் தான்! சிலருடைய புத்திப்போக்கு, பொறாமை, ஆத்திரம், கபடாடிப்பு, விசுவாசக் கொக்குத்தனம், டக்குடமாரம், காக்கா பிடிக்கிற வித்தைகள், ஏமாற்றுகிற தந்திரங்கள், மோசடிகள், உள்ளே யொன்று வெளியே ஒன்று—இன்னும் இதுபோன்ற சாக்கடைக் கசுமாலங்களை யெல்லாம் கண்டு பிடித்து மனுஷாளின் குணங்களைக்கண்டு கொண்டதும் இந்த வருஷத்தில் தான்! எத்தனையோபேர் இந்த வருஷத்தில் விவாகம் செய்து புது சோபன சந்தோஷங்களை யனுபவித்திருக்கிறார்கள்! அவ்விதமே எத்தனையோபேர் உயிருக்குயிரா யிருந்தவர்களைப் பறிகொடுத்துக் கண்ணீர் விட்டிருக்கிறார்கள்! ஒரு பக்கம் சந்தோஷச் செய்திவர, அதே சமயம் மற்றொரு பக்கம் வியவகார சம்பந்தமாய் வக்கீல் நோட்டீஸ் வந்து கவலைப்பட, இவ்விதமாகவும் எவ்வளவோ ஸம்பவங்கள் இந்தப் பித்தளை வருஷத்தில் நடந்திருக்கின்றன! கடைசியாக, "அமிர்த குணபோதினி" கைமாறியதும் இந்தப் பித்தளை வருஷத்தில்தான்! வருஷ முழுதும் ஒரு டயிரியை எழுதி வந்து முடித்துப் போன வருஷ டையிரியிலுள்ள விஷயங்களையும், இப்போது முடிந்து விட்ட வருஷத்திய டையிரியில் எழுதிவைத்துள்ள விஷயங்களையும் ஒத்திட்டுத் நிராசில் நிறுத்திப் பார்த்தால் இன்ப துன்பங்கள் இந்த இரண்டு டைரியிலும் ஏறக்குறைய சரிபாக மாகவே கலக்கப்பட்டுப் போயிருக்கின்றன வென்று காணலாம். இப்படியாக எந்த வருஷத்தையும் மறப்பதற் கில்லாமல், அந்தந்த வருஷமும் தன்னிலே ஒரு முக்கிய சங்கதியைக் கொண்டதாகி, அந்த சங்கதியில் அந்த வருஷம் ஒரு விசேஷித்த வருஷமாகி விடுகிறது! இந்த நிலையில் பழயதைப் பித்தளை வருஷமென்றும், புதியதைத் தங்கத்துக்கு ஒப்பான வருஷ மென்றும் என் நஞ்சான் குஞ்சான்கள் மயங்குவதை விகடன் கண்டு, அந்த மயக்க மாயையைத் தெளிவிக்கவே இவ்வளவு தூரம் விவரித்தும் பேசவந்தேன்! என்ன பேசினாலும், புது வருஷத்தின் மீதும், புதுப்பெண்ணின் மீதும், புதியதாய் வரப்போகும் அதிர்ஷ்டத்தின் மீதும், புது நூலின் மீதும், புதிதான கைபடாத பண்டங்கள்மீதும் ஒரு புது மோகமும் ஆவலாதிகளும் இருக்கவே செய்யும்தான்! உலகமே ஒரு நாடகசாலை!—இதில் சாமி தந்தார் சகலருக்கும் வேலை! நடக்கிறது நடக்கட்டும், நக்குகிறது நக்கட்டும் புது வருஷமும் எல்லோருக்கும் மங்களகரமான அதிர்ஷ்டலாப வருஷமாய் முடியட்டுமென்று விகடன் வாழ்த்துகிறேன்! எல்லோருக்கும் புது வருஷ வந்தனங்களும் தெரிவித்துக்கொள்கிறேன்! ராம்! ராம்! சுபம்! சு!! சுவாஹா!!!

---

மதராசில் வழங்குஞ்சாதி வங்காளத் தன்னிற் காணோம்,
துதிகல்கத்தா ஜாதி தொகை மதிராசில் காணோம்,
பதிபம்பாய் தேயஜாதி பந்தரிலொன்றுங் காணோம்,
விதங்களைத் திறமாய்ச் சொல்ல விதியுண்டோ சாதியாரே.

—சைதாபுரம் காசி விஸ்வநாத முதலியார் 1871-ம் ஷ.

# மணப்பெண்ணிலிருந்து மாமி.



முதலில் ஒரு நங்கை கல்யாணப் பெண்ணாக ஏதுமறியாதவள்போல் பரமசாதுவாய் இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று சொல்லும் படியாக மிகுந்த நாணத்துடனே குனிந்து குந்தியிருக்கிறாள். அவளுடைய பட்டித்தனமோ, சாந்தமான நற்குணமோ எதுவும் அப்பொழுது தெரிகிறதில்லை.



பிறகு சில வருஷங்களில் தேறிவிட்ட பெரிய மனுஷிபோல் காண்பித்து மருகி அந்தஸ்திலிருந்து தாய் அந்தஸ்துக்கு உயர்ந்து, ஆரவாரிக்கிறாள். அவள் குமாரனும் நன்கு வாசித்துத் தேறுகின்றான்.



விவாகத்திற்குப்பின் மாமிக்கு அடங்கின பெண்ணாக நின்று நடித்து, திட்டு குட்டுகளெல்லாம் பட்டு, வீடு இருக்கும் போக்கை நன்றாகத் தெரிந்துகொண்டு சம்சார தர்மத்தை நடத்துகிறாள்.



பழைய மணப்பெண் இப்போது புதிய மாமியாகி மாமியின் அந்தஸ்தை யடைந்ததும், முந்திய மூத்த மாமி வீட்டின் ஓர் மூலையில் மதிப்பில்லாமல் தள்ளப்படுகிறாள். இவளே ஸர்வாதிகாரப் புது மாமியாகிப் பெண்களின் வம்புக் கூட்டத்தில் தலைமை வகிக்கிறாள். எஜமானியாகிறாள்.

# சென்றமாதம்

புது வருஷ. கௌரவபட்டங்கள்:—

சென்னை மாகாணத்தைப் பொறுத்த மட்டில் உத்தியோகஸ்தர்களல்லாதவர்களுக்குக் கிடைத்த பட்டங்கள் மிக்க அபூர்வம். சிலர் ஒரு பட்டத்தைப் பெற்ற பிறகு மேலுக்கு மேலும் பெறுகிற அதிர்ஷ்டசாலிகள். வேறு சிலரோ ஒரே பட்டத்துடன் தமது ஜீவகாலத்தை முடித்து விடுவர். பட்டம் பெற்றவர்கட்கே அதனிலும் உயர்ந்ததை யடைவதற்கும் ஆசை துடிக்குமாம்!

ஃ

டிசம்பர் மஹா நாடுகள் :—

காங்கிரஸ் மகா சபை கூடிய பந்தலிலேயே டிஸம்பர் மகா நாடுகளிற் பல கூடுவது வெகு கால வழக்கம். அந்த மகா நாடுகளைப் பற்றிப் பத்திரிகைகளிலும் விஸ்தாரமாக வரும். காங்கிரஸ் நடவாது போகவே, மற்ற மகா நாடுகளும் சுருங்கிவிட்டன.

ஃ

ஹரிஜன ஆலயப் பிரவேசம் :—

பிரவேச எதிர்ப்பும், பிரவேச ஆதரிப்பும் அநேகமாய் சமமாகவே இருக்கக்கூடும். இரு கக்ஷியிலும் ஆரவாரங்கள் அதிகமே. ஆலயப் பிரவேசத்திற்கு சட்டத்தைத் திருத்த வேண்டிய பாகம் முக்கியமாய் விட்டதில், அதற்காக மகாத்மா தமது உபவாசத்தை நிறுத்தி வைத்திருக்கிறாராயினும், எந்த நிமிஷத்தில் மறுபடியும் உபவாசக்கிளர்ச்சி தோன்றுமோ !

ஃ

ஆலயப் பிரவேச மசோதா :—

ஹரிஜனங்கள் ஆலயத்திற்குச் செல்வதற்கேற்றபடி கொண்டுவரப்பட்டுள்ள மசோதாவுக்கு இந்தியா கவர்ன்மெண்டார் அநுமதி கொடுத்து விடுவரா வென்பது வினா? பிரிட்டிஷ் கவர்ண்மெண்டார் எற்கெனவே மதச்சார்பான உடன்கட்டையேறுதலைத் தடுத்தும், விதவா விவாக சட்டம் செய்தும், சாரதா சட்டத்தை உறுதிபடுத்தியும், இன்னும் நெடுகத் திருத்தங்கள் செய்துமிருப்பதால், ஆலயப் பிரவேச மசோதாவையும் எற்றுக்கொண்டு விடலாம். தீண்டாதாரான ஏழுகோடி ஜனங்களின் க்ஷேமத்தைப்பற்றியும் கவர்ன்மெண்டார் சிந்திக்கவேண்டியிருக்கிறதன்றோ ?

ஃ

வட்ட மேஜை மகா நாடு :—

இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் வேண்டுமென்ற கிளர்ச்சியிலிருந்தும் தோன்றிய லண்டன் வட்ட மேஜை மகா நாடுகள் மூன்று முறை கூடி முடிந்தன. ஸ்வராஜ்யப் பிரஸ்தாப

---

தன்னை பெருமையாய்ப் புலப்படுத்திக்கொள்ள விரும்புவோன் பிறரைத் தாழ்த்தி நடத்தப் புகுவதில் முன்னைவிட அதிகமான அலக்ஷியத்தையே பிறர் அவன்மீதுகொள்ள நேர்கிறது. அவனை ஒரு மனித ரூபமாக எண்ணாமல் விலக்கித் தாங்களும் ஒதுங்கி விடுகின்றனர்.

லைக்குப் பதிலாக புதிய அபிவிருத்தித் திருத்தங்கள் என்ற ஓசை கேட்கின்றது.

மகா மகம் :—

அடுத்த மாசி மாதத்தில் கும்பகோணத்தில் நடைபெறும் இந்த மகோத்ஸவமானது தென்னிந்தியாவுக்குஇன்னும் அதன் பூர்வசக்தி இருந்துகொண்டிருக்கிறதென்பதைக் காட்டும் அறிகுறியாகும். இந்த மகாமகம் 12-வருஷங்களுக்கு ஒரு முறை வருவதில். சென்ற மகா மகத்தின்போது இருந்தவர்களிற் பலர் இந்த மகா மகத்தில் இல்லாதிருக்கவும் கூடும். சென்ற மகா மகத்தில் ஐசுவரிய ஸம்பன்னர்களாய் இருந்தவர்கள் இப்போது தரித்திராதேவி தாண்டவமாடும் நிலையிலும், அப்போது ஏழைகளாயிருந்தோர் இப்போது சீமான்களாகவும் இருக்கலாம். உலக வாழ்வில் 12-வருடங்களுக்கிடையில் நேரிடக்கூடிய மாறுதல்களைச் சொல்லவுங்கூடுமோ!

## உபவாச விசேஷம்.

நாம் செய்துவரும் காரியங்களெல்லாம் மனதைப் பொருத்திருக்கின்றன. நாம் அடையும் பலனும் நம்முடைய மனப்பான்மையைச் சார்ந்திருக்கின்றன. உபவாச பலனும் அப்படியே. பட்டினி கிடப்பதால் புண்ணியமுண்டு. உபவாசமிருப்பதால் நமது சரீரம் பரிசுத்தமாவதுடன், வலுவையும் அடைகின்றது. இவ்விதம் இருப்பதற்கு உத்தமமான நோக்கமும் அத்துடன் பிணைக்கப்பட்டிருக்க வேண்டும். ஏதாவது ஒரு விரதம், நோன்பு, லக்ஷ்யம், அல்லது வைத்தியரின் கட்டளை எதுவாவது ஒன்று முக்கியமாயிருந்து அதற்காகவே உபவாசமிருப்பதாகக் கொண்டால்தான் மனோ உறுதியுடன் செய்து நிறைவேற்ற முடியும். வாரத்திற்கொருநாள் விரததினமாகச் செய்துகொண்டு ஒருவேளை உணவுடன் இருப்போர் பலருண்டன்றோ? இது கருதியே பெரியோர் ஒரு குறித்த ஸங்கல்பத்திற்காக விரதமிருப்பதென்று ஸங்கல்பம் ஒன்றை விதித்திருக்கிறார்கள். ஸங்கல்பத்தால் தான் மனதும் ஓர் நிலையில் நிற்கக்கூடும். பெரிய விஷயங்களுக்காகப் பட்டினி கிடப்பதென்பது நமது ரிஷிகள் கண்டுபிடித்திருக்கும் ஓர் சூக்ஷ்மமாகும். அதனால் மனது சுத்தமாவதுடன், நாம் நிரம்பவும் திடத்தையும் தீர்மானத்தையும் அடைகிறோம். உபவாசத்தால் பிணிகள் பல நீங்குமென்று வைத்திய சாஸ்திரமும் ஒப்புக்கொள்கிறது.

மதிக்கப்படாத இடத்தில் மாட்டிற்குக்கூட மதிப்பு இல்லை.

# விகட ஞான மணிகள்.

அமைச்சர்க்கழகு அஸ்திவாரம் நாட்டல்
மந்திரிக்கழகு மின்சாரந் திறத்தல்
ஐயர்கடை மாவை யாரரைத் தாலென்ன?
உயர்தரக் கல்வியால் உப்புங்கிடையா.

இராஜாங்கமெல்லாம் ரோஜா மாலையில்
கைராட்டினமே காந்தியார் வேதம்
புக்கிங்சாரிடம் வெகு வெகு ஜாக்கிரதை
வைஸ்ராய் விருந்துக்கு வைதீகமில்லை.

மாமிக்கின்பம் மாப்பிள்ளைத் தார்பார்
சமபந்தி யொன்றே சாதிக்கு வேட்டு
தேனீர் விருந்தில் தேவரும் வசியம்
வாத்தியா ரெல்லாம் வாயில்லாப் பூச்சிகள்

பண்டிதர் பாடு உண்டிக்கே தாளம்
சாரதா சட்டத்தால் சாஸ்திரம் போச்சு
ஆயிர மிருந்தாலும் அதிகாரியல்லவா?
நாகரீக மெங்கே? நாடகமேடையில்!

ஸ்தலஸ்தா பனங்களில் மனஸ்தாபங்களே
நாடு கெட்டது நாக்கு ருசியாலே.
ராகுவில் ரயில்வண்டி ஓடுவதில்லையா?
ஜெமீன்தா ரென்றால் சுயேச்சை விரோதி

தேசங் கெட்டது தேர்தல் வந்தே
ஹரியும் சிவனும் ஹரிஜனத்துக் இல்லையா?
அயலாத்துக் கவலை அத்தானுக் கேனோ?
தேசீயமுந் திருட்டும் சிறையி லொன்றே
கிண்டிப் பாராதவன் சண்டியே யாவான்.

(வி. எஸ்.) "குமரன்."

---

உயர்ந்த ஜாதி ஹிந்துக்கள் எத்துணைச் சுயநல உருவமாயுள்ளாரென்பதும், அவர்கள் தம்மை பொத்த மனித ரூபமான தீண்டாத வகுப்பினரை எத்துணைக் கேவலமாக ஒதுக்கும் கொடிய குரூரமான தன்மை வாய்ந்தவரென்பதும், எங்கும் வியாபகமாயுள்ள கடவுளைத் தீண்டாதார்க்கு இல்லையென்று சொல்லி மறுப்பதில் எவ்வளவு விகாரமாய் நடந்துகொள்கிறார்களென்பதும் தற்போதைய ஸம்பவங்களால் வெளிப்பட்டுவிட்டன.

---

தம் நிலையின் இகழ்ச்சியை உணர்ந்து, தம் வீட்டாருடைய கஷ்டங்களை நினைந்து வருந்துவோருக்குச் சிரிப்பு முகம் ஏது?

# இக்காலத்திய அல்லிராணிகள்.



முன்னொரு காலத்தில் அல்லி ராணி என்னும் ஒரு மாது ஆண்வாடைதானும் மேலே வீசாமல் அரசாண்டு வந்தனள் என்று நம் புராணங்களில் எழுதப்பட்டிருக்கும் கதை நிஜமோ பொய்யோ நிச்சயமாகச் சொல்லமுடியாது. அதை ஆண்பிள்ளைகள் என்னவோ நம்பவில்லை. ஆனால், தற்காலத்தில் பெண்டிர் நன்ருக நம்புகிருர்கள். "ஆண் பிள்ளைகளுக்கு நாம் என் அடங்கியிருக்கவேண்டும்? அவர்கள் பணம் சம்பாதித்து வருவதால் தானே! நாமே உத்தியோகஞ் செய்து பணம் சம்பாதித்தால், அவர்களுடைய தயவை எதிர்பார்க்காமலே, நம்மிஷ்டப்படிச் சுயேச்சையாகக் காலங்கழிக்கலா மல்லவா?" என்று சொல்லி, தாமும் கல்லூரிகளுக்குச் சென்று வாசித்து உத்தியோகஞ் செய்து பணம் சம்பாதிக்கவாரம்பித்து விட்டனர். நமது அரசாங்கத்தாருடைய பட்சபாதத்தையோ சொல்லவேண்டாம். நாம் எல்லோரும் வாசிப்பு முடிந்ததும், நற்சாட்சிப் பத்திரங்களை யெடுத்துக்கொண்டு ஒவ்வொரு கம்பெனியாக ஏறியிறங்கி, "குமாஸ்தா வேண்டுமோ?" என்று கேட்டுத் திண்டாடியும் வேலையாதும் அகப்படாமல் அழவேண்டியது அத்தியாவசியமாக இருக்க, பெண் பிள்ளைகள் பாஸ் பண்ணுலும் பண்ணுவிட்டாலும் அவர்களுக்கு வேலை கொடுத்து விடுகின்றனர். இதனுல் ஏற்பட்டுள்ள தொல்லைகள் அவர்களுக்கு என்ன தெரியும்? புருஷன்மார் என்னும் மதிப்பே போய் விட்டது. அதற்குப் பதில் ஆண்கள்மேல் அவநம்பிக்கை ஏற்பட்டு விட்டது. பெண்டிர். "ஆண்களே நமக்கு வேண்டாம். அவைகள் எல்லாம் நம்முடைய விளையாட்டுக் கருவிகள். நமக்கு ஒத்தாசையாக இருப்பதற்காகச் சிருஷ்டிக்கப்பட்ட ஜந்துக்கள். அவைகளைச் சட்ட சபைகளுள் சேர்க்கவே கூடாது. ஜனங்களுக்கெல்லாம் கஷ்டத்தை விளைக்கின்றன. ஆண் மிருகங்கள் அரசாங்கத்தருகே வரவே கூடாது. அப்பொழுதுதான் நமக்கு விமோசனம் ஏற்படும்," என்று மறைவாகச் சொல்லுவது மட்டுமல்லாமல் மஹா நாடுகளிலும் பிரசங்கிக்கவாரம்பித்து விட்டனர். தேளுக்கு இடங்கொடுத்தால் நிமிஷத்திற்கோர் முறை கொட்டும் என்பார்கள். அதே மாதிரி, எவ்வெப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கிறதோ அவ்வப்பொழுதெல்லாம் நம்மைத் தூற்றுகின்றனர்.

ஃ

சிறிது காலத்திற்கு முன்னர் சென்னையில் நடந்த பெண்டிர் மஹாநாட்டிற்கு என் மனைவி போயிருந்தாள். அவள் அதற்குப் போவதற்கு முதல் நாள் என்னை அனுமதி கேட்டபோது நான் கொடுத்திருக்கப்படாது. அதனுல் வந்த வினை. இரண்டாவது மூன்ருவது நாட்களில் என்னுடைய அனுமதி கேட்காமலே மஹாநாட்டிற்குப் போகவாரம்பித்தாள். மஹாநாடுமுடிந்த பின்னர் அவளுடைய குணம் முற்றும் மாறிவிட்டது. தனக்கு இஷ்டமானதைச் செய்வாள். நான் வேண்டாம் என்று சொன்னுல் என்னைச் சட்டை செய்யமாட்டாள். நான் ஏதேனும் ஒன்றைச் செய்யச்

சொன்னால். அதற்கு முற்றிலும் விரோதமானதைச் செய்வாள். எனக்குக் காட்டிவந்த மரியாதை முற்றிலும் போய்விட்டது. பார்த்தேன்நான். என்னலான மட்டும் புத்திமதி சொன்னேன். புருஷர்க்கு அடங்கி நடப்பது பெண்டிர்க்கு அழகு என்று சொன்னேன் மருட்டினேன்; திட்டினேன். ஆனால்என்னுடைய முயற்சி எல்லாம் வீணாகமாறியது. அவள் மூர்க்கமாக, "நீர் என்னவேண்டுமானாலும் சொல்லும். பெண்டிர் எல்லோரும் இத்தனை நூற்றாண்டுகளாக ஆண் பிள்ளைகளுக்கு அடிமைகளாக இருந்து வந்தனர். அப்பொழுது அவர்களுக்குக் கல்வியறிவு அவ்வளவு இருக்கவில்லை ஆனால். இனிமேல் அப்படி இருப்பார்கள் என்று எண்ணவேண்டாம். எங்களுக்குப் புத்தி விசாலமாகிவிட்டது. ஆண்பிள்ளைகள் இல்லாமல் காலத்தைக் கழிக்கமுடியும். ஆகையால் உம்முடைய மருட்டலையும் உருட்டலையும் மூட்டை கட்டி வையும்" என்றாள்.

ஃ

பார்த்தேன் நான். அவளை யடித்து அடக்குவது எனக்குப் பிடிக்கவில்லை ஆகையால். ஆண்பிள்ளைகள் இல்லாமல் பெண்டிரால் காலத்தைக் கழிக்கமுடியாது என்பதை நிருபிக்க என்னவேனும் உண்டா என்று ஆலோசித்தேன். கடைசியில் என் நண்பன் கோவிந்தனுடன் இதைப் பற்றிக் கலந்து பேசினேன். இருவரும் ஒரு யுக்தி செய்வது என்று தீர்மானித்தோம்.

ஃ

அமாவாசை இரவன்று கோவிந்தன் ஒரு கள்வனைப் போல் மாறு வேடம் தரித்துக்கொண்டு என் வீட்டுள் நுழையவேண்டும் என்றும், அவன் என் மனைவியின் அறையில் திருடும்போது சிறிது சப்தம் செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்தோம். எங்கள் கொள்கைப்படி சப்தம் செய்தால் என் மனைவி நித்திரையினின்றும் எழுந்து விடுவாள். நித்திரையினின்றும் எழுந்தவுடனே தன் அறையில் ஒரு கள்வன் இருப்பதைக் கண்டால் அவள் அச்சங்கொள்வாள் "ஐயையோ" என்று அலறி என்னை யெழுப்புவாள். உடனே நான்எழுந்து திருடனை உதைத்துத் துரத்திவிடலாம். அவ்வாறு துரத்தினால் அவளுக்கு என் பலத்தின்மேல் நம்பிக்கையேற்படும். ஆண்கள் இல்லாமல் பெண்டிர் காலத்தைக் கழிக்கமுடியாது என்று நம்பிவிடுவாள். அதன் பிறகு எனக்குக் கீழ்ப்படிந்து நடப்பாள். ஆகவேதான் நாங்கள் இருவரும் இந்தச் சிறந்த யுக்தி செய்தோம்.

ஃ

கோவிந்தனை நோவாமல் அடித்துத் துரத்துவதாக நான்வாக்களிக்க வேண்டியது அத்தியாவசியமாயிற்று. நான் அவ்வாறு சத்தியஞ் செய்து தராவிட்டால் அவன் கள்வனாக வேஷம் போட்டுக் கொண்டு வரமாட்டேன் என்றான். அவனும் பிடிவாதம் பிடிக்க, நானும் பிடிவாதம் பிடித்தால் காரியம் நடக்கவேண்டாமா? ஆகையால் நான் அவனுக்குத் தாழ்ந்து போனேன்.

ஃ

அமாவாசை இரவு சுமார் ஒரு மணிக்கு என்னறையில் மாறுவேஷம் பூண்ட கோவிந்தன் வந்தான். அவன் நாங்கள் ஏற்பாடு செய்தபடி சப்தம் செய்யவும் என்மனைவி நித்திரையினின்றும் எழுந்தாள். உடனே பெண்கள் அலறி அக்கம்பக்கத்தில் இருப்பவர்களை எழுப்ப வேண்டுமல்லவா? அவ்வாறு அவள் செய்யவில்லை. என்னைச் சட்டை செய்யாமலே

படுக்கையினின்றும் எழுந்திருந்தாள். "யாரடா அது:" என்று பலத்த குரலில் கோவிந்தனைக் கேட்டாள்.

ஃ

"சும்மா வாயை மூடுகிறாயா? இல்லாவிட்டால் உன்னை கொன்றுவிடட்டுமோ:" என்றுகேட்டான்கோவிந்தன்

பாவம் அடுத்த நிமிஷம் அவன் முகத்தைப் பார்த்து என் மனைவிபலமாக ஒரு குத்து விட்டாள். இவ்வாறு அவள் செய்வாள் என்று எதிர்பார்க்காததால் கோவிந்தன் கீழே தொப்பென்று விழுந்தான்.

அதற்குப்பின் அவனுக்கு எத்தனை குத்தும் உதையும் விழுந்ததோ சொல்ல முடியாது. மொத்தத்தில் அவனுக்கு நல்ல உதை கிடைத்தது என்று மட்டும் ஒப்புக்கொள்வேன். எங்கள் யுக்திப்படி, என் மனைவி கூக்குரலிட்டால்தான் நான் எழுந்திருக்க வேண்டுமாகையால் நான் எழுந்துபோய் கோவிந்தனை மீட்காமல் இருப்பது சகஜந்தானே. அது மட்டுமல்ல. அவனை மீட்டால், திருடன் பக்கம் சேர்ந்து கொண்டதாக என்மேல் என் மனைவி பழி சுமத்துவாளே. அதற்கு என்ன செய்வது? ஆகையால் கண்களைத் திறக்காமலே தூங்குவதுபோல நான் பாசாங்கு செய்து கொண்டிருந்தேன்.

அவனை நையப்புடைத்த பின்னர் என் மனைவி அவனை நோக்கி, "இந்த மூலையிலே நின்றிரு; ஓடப் பார்த்தாயோ உன்னைக் கொன்று விடுவேன்" என்று சொல்லிவிட்டு, என்னை யெழுப்பினாள். "என்ன? என்ன?" என்று சொல்லிக் கொண்டே நான் எழுந்திருந்தேன்.

"நான் எத்தனையோ முறை ஆண்கள் எல்லோரும் கோழைகள் என்றும், மட்டிகள் என்றும் சொல்லியிருக்கிறேனல்லவா? இதோபார். இந்தத் திருட்டுப்பயல் என்னைக் கண்டதும் எவ்வளவு நடுங்குகிறான். ஆண்பிள்ளைகளாம் ஆண்பிள்ளைகள். உங்களுக்கு என் மீசை வளருகிறதோ! அவன்தான் பெருத்த கோழையென்றால் நீரும் அவனைவிடப் பயங்காளியாக இருக்கிறீர். இவ்வளவு சண்டை நடக்கும்போதும் உமக்கு நித்திரை கலையவில்லையா? எழுந்திருந்து திருடனுடன் சண்டைபோட பயம்! ஆகையால்தானே நீர் எழுந்திருக்கவில்லை? ஆண்கள் எல்லோரும் ஒழிந்துபோய், உலகம் எப்பொழுது பெண்டிர் மயமாகுமோ!" என்று சொன்னாள்.

ஃ

பிறகு கோவிந்தனைக் காலால் உதைத்து, "ஓடிப்போ நாயே! உன்னைப் போலீசாரிடம் இந்தத்தரம் ஒப்புவிக்கவில்லை. இனிமேல் வந்தால் கட்டாயம் ஜெயிலுக்கு அனுப்பி விடுவேன்," என்றாள்.

ஃ

கோவிந்தன் அரைக்கணத்தில் அங்கிருந்து ஓடிவிட்டான். அவன் என்னுடன் இப்பொழுது பேசுவதில்லை. என்னுடைய நிலைமையில் நீங்கள் இருந்தால் என்ன செய்வீர்கள்? திருடவந்த நண்பனுக்கு ஒத்தாசை செய்வதா, அல்லது மனைவியுடன் சேர்ந்து கொண்டு அவனை உதைப்பதா? இரண்டையும் செய்யக் கூடாத நிலைமையில் இருந்ததால் தான்நான் தூங்குவதுபோல் பாசாங்கு செய்தேன். கேவலம் ஒரு பெண் பிள்ளைக்கு ஈடு கொடுக்க அவனால் முடியவில்லை. நான் பிள்ளையாகப் பிறந்தது முதல் சாகிறவரையில் அந்தப் பெண் மணியுடனேயே காலத்தைக் கழிக்கிறேன். அந்தச் சுகம் போதாதா? இவனும் என்மேல் வீணாகப் பழி சுமத்தி என் மனதைப் புண்ணாக்கி வருத்தப் படுத்த வேண்டுமோ? ஹா! விதியே!!

P. R. R. ஐயங்கார்.




# சந்தேக நெருப்பு.



உலகில் கல்வி கற்ற நங்கையரிற் சிலர் தங்களின் அநுபவங்களை யெல்லாம் ஒன்று சேரத் திரட்டி அழகிய கதைகளாக எப்படியோ வெகு சமர்த்தாய் எழுதி விடுகிறார்கள். அவற்றின் கற்பனைத் திறமும் நன்றாயிருக்கிறது. நான் ஆண் பிள்ளையாயிருந்தும் என்ன பிரயோஜனம்? எப்படி எழுதுவது என்று என் மூளைக்கு விளங்கவில்லையே. ஆனால், எனக்கும் என் மனைவிக்கும் நடந்த ஒரு சம்பவம் இருக்கிறது. அதை எழுது என்று என் புத்தி சொல்லிற்று. அதை ஒரு சிறு கதையாகப் பக்குவப்படுத்தி இங்கு தருகிறேன். நமது சென்று போன வாழ்நாட்களின் பகுதிகளெல்லாம் ஒவ்வொரு சிறுகதைகட்கு ஒப்பாகவே இருக்கின்றது.

ஃ

எனக்கு ஒரு மனைவி; அவளுக்கு ஒரு குழந்தை; அந்த குழந்தைக்கு அப்போது வயது ஆறுமாதம். என் பெண்ஜாதி பிரதிதினமும் காலை மாலை எங்கேயோ போய்க்கொண்டிருந்தாள். நான் முதலில் என்னமோ என்றிருந்தேன். ஆனால், வரவர எனக்கு அதில் ஸம்சயம் உதித்துக் கோபம் உண்டாகி யோசிக்கலானேன் இவள் தினம் விடியற் காலையிலும், கைகால்கள் சுத்தி செய்து, நெற்றியில் குங்குமம் அணிந்துகொண்டு எங்கே போகிறாளோ தெரியவில்லையே; ஏதேனும் புதுமோக வலையில் மயங்கி விட்டாளோவென்று பல பல கருதி நெஞ்சம் புண்ணானேன். குடித்தனத்தைத் தடித்தனமாக்க இந்த ஒரு சந்தேகமே போதுமல்லவா? ஒரு தினம் மாலைப்போதில் அவள் வழக்கம்போல் வெளியே சென்று விட்டாள். நான் வீட்டுக்குள்ளே போய்ப் பார்த்தேன். விளக்கு எரிந்து கொண்டிருந்தது. குழந்தை தொட்டிலில் தூங்குகிறது. அடுப்பில் பால் காய்ந்து கொண்டிருக்கிறது. அப்போது எனக்கு வந்த கோபம் உங்களில் யாருக்குமே வந்திருக்காது. சட்டென்று குழந்தையைக் கொன்று விட்டேன். பாலில் உப்பை அள்ளிப் போட்டு விட்டேன். விளக்கை நிறுத்திவிட்டேன். பிறகு எதிர் வீட்டுத் திண்ணையில், கந்த ஷஷ்டியன்று சூரசம்மாரத்திற்குக் கையில் கத்தியுடன் தாசி வருவதுபோல் என் கையில் கத்தியுடன் சூரசம்மார மூர்த்தியைப்போல், வரட்டும் அவள், ஒரே வெட்டாய் வெட்டி விடுகிறேன் என்று கருவிக்கொண்டிருந்தேன். அது சமயம் யாராவது என்னைப் பார்த்து விட்டிருந்தால் மறியல் செய்

வோர்களைச்சிறையிலடைப்பதுபோல் எனக்கும் ஜெயில் வாசம் கிடைத்திருக்கும். அல்லது பயித்தியக்கார ஆஸ்பத்திரிக்காவது கொண்டுபோயிருப்பார்கள். ஆனால் என் நல்ல காலம் யாரும் பார்க்கவில்லை. பிறகு என் மனைவி எங்கேயோ போனவள் வந்தாள். வீட்டுக்குள் சென்றாள். நான் இரண்டு நிமிஷங்கழித்து வெகு உக்கிரகத்துடன் உள் நுழைந்தேன். சென்றதும் ஆச்சரியமான சம்பவத்தைக் கண்டு என்னுடைய கோபமெல்லாம் பறந்தோடி பரணையில் ஒளிந்து கொண்டது. பிறகுமெள்ள 'யாரங்கே' என்றேன். உடனே என் மனைவி அடுப்பங்கரையிலிருந்து ஏன் நாதா என்று வந்தாள். இங்கே என்ன சம்பவம் நடந்திருந்தது என்றேன். அதற்கு அவள் "ஒன்றுமில்லையே" என்றாள். "ஒன்று மில்லையா? நடந்ததைச் சொல்லுகிறாயா? என்ன நீ மாயக்காரியா? அல்லது ஜாலவித்தைக்காரியா? தெரியவில்லையே" என்றேன். "இல்லை சுவாமி, சொல்லுகிறேன் கேளுங்கள். நான் வந்ததும் பார்த்தால் விளக்கு அணைந்திருந்தது; குழந்தை இறந்து கிடந்தது; பால் கட்டி முட்டியுமாய்க் கெட்டுப்போயிருந்தது" என்றாள். "ஆமாம் வாஸ்தவந்தான், இப்போது அவைகளெல்லாம் எப்படி முன்புபோலானது சொல்" என்றேன். ஒன்றுமில்லை நாதா, "வெள்ளெருக்குக் கீழிருக்கும் வேதாந்த அச்சுதரே, அணைந்த விளக்கெறியவேண்டும். அழுத குரல் கேட்கவேண்டும். கெட்டபால் நல்ல பால் ஆகவேண்டும். சேசுவா உன் பாரம்" என்றேன் அவைகள் முன்புபோலவே ஆகிவிட்டன என்றியம்பினள். அது யார்? வெள்ளெருக்குக் கீழிருக்கும் வேதாந்த அச்சுதர் என்றேன். "நான் தினம் காலையிலும் மாலையிலும் வணங்கிவரும் தெய்வம்" என்றாள். "அப்படியா ஏதோ காட்டு பார்க்கலாம்" என்று சொல்ல, "அப்படியே வாருங்கள் காண்பிக்கிறே" னென்று என்னை ஒரு இடத்திற்கு அழைத்துச் சென்று ஒரு வெள்ளெருக்குச் செடியைக் காண்பித்தாள். "எங்கே வேதாந்த அச்சுதர், என" "இந்த செடியின் கீழ் வேதாந்த அச்சுதர் யிருப்பதாகப் பாவித்து தினம் ஒன்பது சுற்று சுற்றி வருகிறேன் நாதா" என்றாள். "ஆ, அப்படியா இதை எனக்கு முன்பே ஏன் தெரிவிக்கக்கூடாது? உன்னையும் இந்தக் கத்தியால் வெட்டிவிட எண்ணியிருந்தேனே. இருந்தாலும் இந்த வேதாந்த அச்சுதர் தான் உன்னைக் காப்பாற்றினார்" என்றுசொல்லி என்னையே நான் வெறுத்துக் கொண்டேன். மறுநாள் காலியிருந்து நானும் என் பெண்ஜாதியுடன் போய் தினம் வேதாந்தம் அச்சுதரை சுற்றிக் கொண்டுவருகிறேன். அன்று முதல் என் வீட்டின் செல்வமும் வியாபாரமும் பெருக ஆரம்பித்து இப்போது நான் சுக நிலையில் இருக்கிறேன். என் மனைவியின் மூலமாக எனக்கும் தெய்வபக்தி யுண்டாயிற்று. ஆகவே, எதிலும் ஆத்திர சிந்தை கொள்ளாமல் எக்காரியத்தையும் தீர விசாரித்துச் செய்வதுதான் நலம். கண்ணால் பார்த்ததும் பொய், காதால் கேட்டதும் பொய், தீர விசாரிப்பதே மெய்.

R. கோமளவல்லி அம்மாள்.

---

"நாகரீகமுள்ள உலகத்தாரின் மதிப்பில் நம்மை கேவலமடையச் செய்யும் கொடிய கேடுகளில் ஒன்றான தீண்டாமையை நீக்கி நமது தேசத்தைப் புனிதமடையச் செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது.—டாக்டர் ரவீந்திரநாத டாகூர்.

# "அமிர்த குணபோதினி"

## ஆங்கீரஸ ஹஸ்த்திய தை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங். | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [உத்தராயனம் விருத்தியர்க்கம். |
| உ-ம | 13 | 1 | வெ | துவி-52-28, பூச-15-17, மகாரவி 18-56, கரிநாள் |
| ம-அ | 14 | 2 | சனி | திரி-52-55, ஆயி-17-41, கரிநாள் மாட்டுப்பொங்கல் |
| | | | | சிவரம் பார்வேட்டை. [வேட்டை. |
| ம-சி | 15 | 3 | ஞா | சது-52-23, மக-19-10, கரிநாள், செங்குன்றம் பார் |
| சி | 16 | (4-45) 4 | திங் | பஞ்-50-50, பூர-19-42. திருகச்சியூர் பார்வேட்டை |
| அ-சி | 17 | 5 | செ | ஷஷ்-48-20, உத்-19-17, |
| | | | | பிணிகினி தீர்த்தம். |
| ம-சி | 18 | மகரம் 6 | புத | ஸப்-44-49, ஹஸ்-17-53. |
| சி-அ | 19 | 7 | வியா | அஷ்-40-17, சித்-15-29, |
| | | | | அஷ்டகை. |
| சி | 20 | 8 | வெ | நவ-34-51, ஸ்வா-12-10, |
| | | | | கும்பாயனம் 26-38. |
| சி | 21 | 9 | சனி | தச-28-40, விசா-8-2. |
| ம-அ | 22 | 10 | ஞா | ஏகா-21-54, அநு-3-14, |
| | | | | உப-54-49, திதிதுவயம். [தெப்பம். |
| சி-உ | 23 | 11 | திங் | துவா-14-55, மூல-52-47, கரிநாள் திருப்பக்குழி |
| சி-பி | 24 | 12 | செ | திர-7-57, பூரா-47-52. [வாசை. |
| அ-சி | 25 | 13 | புத | சசி-1-20, உப-●-54-8, உரா-43-36, தை அமா |
| சி | 26 | 14 | வியா | பிர-50-48, ஶ்ருவ-40-23, மாகசுத்தம், திருநாங்கூர் |
| | | | | கருடன். |
| சி | 27 | 15 | வெ | துவி-47-31, அவி-38-27, கைலாச கௌரீவிரதம், |
| அ-ம | 28 | 16 | சனி | திரி-46-0, சத-38-13. கௌரீவிரதம், ஷவ்வால்மீ 1 |
| சி-அ | 29 | 17 | ஞா | சது-46-14, பூட்-39-40, கரிநாள், குந்த சதுர்த்தி. |
| சி | 30 | 18 | திங் | பஞ்-48-22, உட்-42-58, மதன வசந்த பஞ்சமி. |
| சி | 31 | 19 | செ | ஷஷ்-52-10, ரே-47-54. [தம். |
| ம-சி | 1 | 20 | புத | ஸப்-57-21, அசு-54-9, ரதஸப்தமி, சந்திரார்க்கவிர |
| சி | 2 | 21 | வியா | அஷ்-60-0, பர-60-0, பீஷ்மாஷ்டமி. |
| சி | 3 | 22 | வெ | அஷ்-3-26, பர-1-17. |
| அ-சி | 4 | 23 | சனி | நவ-9-44, கிரு-8-40. |
| சி | பிப்ரவரி 5 | 24 | ஞா | தச-15-46, ரோ-15-47, ஏகாதசி திதி. |
| அ-சி | 6 | 25 | திங் | ஏகா-21-1, மிரு-22-11, பீஷ்ம ஏகாதசி, அதிதி. |
| | 7 | 26 | செ | துவா-25-8, ஆரு-27-30, பீஷ்ம வராஹ திலபத்ம |
| ம-சி | | | | துவாதசி, துவாதசிதிதி. |
| சி | 8 | 27 | புத | திர-27-57, புந-31-35. [ஸ்வாமி பூச தீர்த்தம். |
| அ-சி | 9 | 28 | வியா | சசி-29-26, பூச-34-22, தைப்பூசம், சென்னை கந்த |
| ம | 10 | 29 | வெ | ○29-33, ஆயி-35-54, பெருந்தேவித்தாயார்தெப்பம் |
| அ-சி | 11 | 30 | சனி | பிர-28-30, மக-36-13, மாகபகுளம், கும்பரவி |
| | | | | 51-33. |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | 15உ-க்கு ராசி | | |
| சனி ர-புத | | | குஜ கேது குரு |
| சுக் | | | |

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1933